தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

ஆருறு தத்துவமும்
ஆணவமும் வல்வினையும்
நீருக முத்திநிலை
நிற்போர்க்குப்—பேருகப்
பார்விரித்த நூலெல்லாம்
பார்த்தறியின் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ
தும். (23)


ஆசிரியர்:-

வித்துவான்,

சோமசுந்தரத்தம்பிரான்சுவாமிகள்

துணையாசிரியர்:-

வித்துவான்,

சோ. சிங்காரவேலன், M. A.,



உ

குருபாதம்

“ஞானசம்பந்தம்”

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 23 | 10-11-64 | இதழ் 12


## உட்பொருள்





அட்டைப்பட விளக்கம்
திருச்செந்தூர்
கந்தசஷ்டி விழாவில்
சூரசம்ஹாரக் காட்சி

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 23 ] குரோதி - ஐப்பசி - 10—11—64 [ இதழ் 12

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றைய முடியினுய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. (சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்

## அறுமுகன் ஆடல்

" உலைப்படு மெழுகதென்ன உருகியே ஒருத்திகாதல்
வலைப்படு கின்ருன்போல வருந்தியே இரங்காநின்ருன்
கலைப்படு மதியப்புத்தேள் கலங்கலம் புனலிற்ரேன்றி
அலைப்படு தன்மைத் தன்ரே 'அறுமுகன் ஆடல்'எல்லாம்."
[கந்த - வள்ளியம்மை - 73]

முருகப்பெருமான் திருவிளையாடலை எடுத்து விளக்கும் தமிழ்ப்பெருங்காப்பியம் கந்தபுராணம் ஆகும்; எல்லாம்வல்ல முழுமுதற் பெருங்கடவுள் ஆகிய சிவபிரானும் முருகனும்

வேறல்லர் ஆதலின் சைவப்பெருமக்கள் முருகவழிபாட்டையும் சிவவழிபாட்டையும் முறையே மேற்கொண்டு இருமைப்பயன்களும் எய்திவருதல் கண்கூடு. முருகன் குன்றுதோறுடும் குமரன்; அன்பர் குறைமுடிக்கும் அருளப்பன். வேற்படை கொண்டு அன்பர் வினைப்பகை தீர்க்கும் கண்கண்ட கடவுள். கச்சியப்பசிவாச்சாரிய சுவாமிகள் அப்பெருமானே 'திகடசக்கரம் என்று' அடியெடுத்துக்கொடுக்க அருளிய பெருங்காப்பியமாகிய கந்தபுராணம் அறுமுகன் ஆடலைச் சுவைகெழும, பக்திமணம் பரவ எடுத்துரைக்கின்றது. கந்தர்சட்டித் திருநாளில், முருகன் திருப்புகழை எடுத்துரைக்கும் இவ்வருட்பனுவலைப் படித்துப் பயன் பெறுதல் சைவர் கடன் ஆகும்.

கந்தன் கருணையைப் பெறக் கந்தபுராணம், விரதங்களுள் சிறந்தவை: வெள்ளிக்கிழமை விரதம், திருக்கார்த்திகை விரதம், கந்தசட்டி விரதம் ஆகிய மூன்றும் ஆகும். என்கிறது வெள்ளிக்கிழமை விரதம்,

"எள்ளருஞ் சிறப்பின் மிக்க எழுவகை வாரந்தன்னுள்
வெள்ளிநாள் விரதந்தானே விண்ணவர் உலகங்காத்த
வள்ளல்தன் விரதம் ஆகும் மற்றது புரிந்த மேலோர்
உள்ளமேல் நினைந்தவெல்லாம் ஒல்லையின் முடியும்அன்றே."

[கந்தவிரதப்படலம் - 3]

என்று வெள்ளிக்கிழமை விரதத்தை வசிட்டமுனிவர் வாயிலாகக் கச்சியப்பர் கனிந்து பாடுவர்; இதனை மேற்கொண்டு பகீரதன் பலன்பெற்றனன் என்பது வரலாறு.

திருக்கார்த்திகை விரதம்இருந்து நாரதமுனிவர் நலம் பெற்றார்; கந்தர்சட்டி விரதம் இருந்து நற்பலன் எய்திய முனிவர்கள் பெருமையைக் கந்தபுராணம் உரைக்கின்றது. ஐப்பசித் திங்களில் சுக்கில பக்கத்துப் பிரதமை முதலாக ஆறுநாட்கள் முருகனை வழிபட்டுப் பலன்பெறுதல் வழக்கு. கந்தர்சட்டித் திருநாளில் இவ்விரதம் மேற்கொண்ட முனிவர்களது அன்புநிலையை உரைக்கும் கந்தபுராணத் திருப்பாடல்கள் பின்வருவன:

" வெற்பொடும் அவுணன் தன்னை வீட்டிய தனிவேற் செங்கை
அற்புதன் தன்னைப் போற்றி அமரரும் முனிவர்யாரும்
சொற்படு துலையின் திங்கட் சுக்கில பக்கந்தன்னில்
முற்பகல் ஆதியாக மூவிரு வைகல் நோற்றார்."

" முந்திய வைகல் ஆதி மூவிரு நாளுங்காலை
அந்தமில் புனலில் மூழ்கி ஆடையோ ரிரண்டுதாங்கிச்
சந்தியிற் கடன்கள்செய்து தம்பவிம் பங்கும்பத்திற்
கந்தனை முறையே பூசைபுரிந்தனர் கங்குற்போதில்."

" நிறைதரு கட்டிகூட்டி நெய்யினுற் சமைக்கப்பட்ட
குறைதவிர் மோதகத்தைக் குமர நாயகற் கருத்திப்
பிறவுள விதியும் செய்து பிரான் திருப்புகழ் விளவி
உறுபுனல் சிறிது மாந்தி உபவசித் திருந்தார் மாதோ."

" ஆரண முனிவர் வானோர் அங்கவண் மற்றை வைகல்
சீரணி முருக வேட்குச் சிறப்பொடு பூசை யாற்றிப்
பாரணம் விதியிற் செய்தார் பயிற்றுமிவ் விரதந் தன்னால்
தாரணி அவுணர் கொண்ட தம்பதத் தலைமை பெற்றார்."

இத் திருப்பாடல்களிலிருந்து கந்தர்சட்டி விரதமேற் கோள்வார் அந்நாட்களிற் காலையில் மூழ்கி யெழுந்து தம்பம், விம்பம், கும்பங்களில் முருகனை முறையே பூசித்து, வெல்லக்கட்டியும் நெய்யும் கூட்டிச் சமைக்கப்பட்ட மோதகங்களை நிவேதனஞ்சேய்து அப்பிரானுடைய புகழ் மொழிகளைத் தமிழிற் பேசி நீர்மட்டும் அருந்தி உண்ணு நோன்பு இருந்து, மறுநாட்காலை பாரணைசெய்தல் அறியப் படுகிறது. இவ்விரதமேற்கோண்ட முனிவர்கள் அவுணர் களால் இழந்த பேறுகள் அனைத்தையும் எய்தினார்கள். முருகப்பெருமானுடைய திருநாமம் மொழிக்குத் துணையாக நின்று காக்கும்; அவ்வருளாளன் திருவடிகள் உள்ளத் துணையாக நின்று உய்விக்கும்.

முருகன் பெருமையை விரித்துரைக்கும் திருப்பனுவல் களைக் கூறுதல் நாவிற்கு அழகாகும். அருணகிரிநாதர்

அப்புகழ்பேசி உய்ந்த அருளாளர். அவருடைய அருள் மொழிகள் நம்மைப் பிறவிக்கடல் நின்று கரையேற்றும் அருள் மரக்கலங்கள்; நம்வாழ்வு இன்பம் நிறைந்து எழில் பொங்கவேண்டுமாயின் அத்தகு அருள்மொழிகளைத் தவிர வேறு துணையில்லை. அவனுடைய திருநாமத்தைப்படித்தல், படித்தவாறே பழகுதல், உலகக்கவலைகளை மறந்து அவன் திருவடிகளோடு ஒன்றுவதற்கு நல்வழி ஆகும். அருணகிரி நாதர் அருள்மொழி இது:

" ஆடும்பரி வேல் அணி சேவல்எனப்
பாடும்பணியே பணியாவருள்வாய் "

பாடும்பணியே பணியாக அருளவேண்டும் என்று பரவு கின்றார் அப்பெரியார்: ஆடுதலும், திருப்புகழ் விரிக்கும் அமுதப் பாடல்களைப் பாடுதலும், ஆகிய அனைத்துமே நெஞ்சுக்கு மணிவாசகர் தரும் அறிவுரைகள்; 'என்புருகப் பாடுகின்றிலை' என்பது திருவாசகநெறி; என்புருக நெஞ் சுருகப் பாடுதல் எளிதில் வாய்க்கப்பெறுவதொன்றன்று. உயர்நிலையில் வரும் அன்பு தரும்விளைவு அது. அவ்வாறு பாடும்பாட்டு உலகை மறந்து, உலகக் கவலைகளை மறந்து திருவடி நினைவு ஒன்றையே உணர நற்றுணையாகும். அப்பரடிகள் " சொற்றுணைவேதியன் " என்று இறைவனைச் சுட்டுவதன் உட்கிடை இதுவே யாகும்; தன்னை மறந்த நிலையில், ஐந்துபொறிவும் கண்களே கொண்ட நிலையில் நான்கு கரணங்களும் சிந்தையே ஆகிய நிலையில், மூன்று குணங்களும் திருந்துசாத்துவிகமே ஆகிய நிலையில் இவ்வாறு அருட்பாடல்களைப் பாடிக்கொண்டே யிருக்கும் சீவபோதம் மெல்ல மெல்ல நெகிழ்ந்து சிவபோதம் கைவரப்பெறலாம்; இந்நிலை கைவரப் பெறுவதே பேசா அநுபூதி பெறும் பேரின்பப் பெருநெறியாகும்.

" ஆசா நிகளம் துகளா யினபின்
பேசா அனுபூதி பிறந்ததுவே."

என்னும் வாக்கின் மெய்ம்மை விளக்கும் இடம் இதுவாகும். வாழ்வின் குறிக்கோள் இது. இதுவே நிலைத்த இன்பத்தை

வழங்கி, என்றும் இன்புற்றிருக்கும் எல்லையற்ற பெரு வாழ்வு. இந்நிலைக்கு நம்மை ஆற்றுப்படுத்துவன ஞானசிரிய பெருமக்கள் வழங்கி யருளியுள்ள நன்மொழிகளே எனின் அவற்றது பெருமையை அளவிட்டுரைத்தலும் கூடுமோ?

இத்தகு அருள்ஞானக் கருவூலமாக விளங்கும் கந்த புராணத்தைக் கந்தர்சட்டித் திருநாட்களில் ஓதுவது உயர் நிலையாகும். பெரும்புண்ணியப் பேறுஎய்தி, உயர்ந்த நல்வாழ்வு வாழவும், வாழ்வின் எஞ்சிய பகுதியைத் திருவருள் நினைவோடு மேலும் தொடரவும் இப் புராண படனம் வாய்ப்புத்தரும்.

மரணத்தைத் தவிர்த்தலாகாது: அது வந்தேதீரும்; இந்த ஆக்கை நிலையாது. ஆதலால் இது பெற்றுள்ள போதே நிலைத்ததை அறிந்து பற்றிக்கோள்ளுதலே அறிவுடைமை ஆகும். இதனை,

"ஆற்றிடு தருமம் விஞ்சை அரும்பெறல் மகவும் சீர்த்தி
ஏற்றிடு கொற்றம் ஆற்றல் இருநிதி பெருமை இன்பம்
நோற்றிடும் விரதம்சீலம் நுவலரும் போதம் யாவும்
கூற்றுவன் கூவும் ஞான்று குறித்திடிற் கூடுமோதான்,"

எனவரும் புராணப்பகுதி தேளிவுபடுத்தும். காலன் என்னும் செம்படவன் காலம் என்ற வலையை வீசி உலகம் எனும் நீர்நிலையில் உள்ள உயிர்கள் என்னும் மீன்களைப் பிடித்தே தீர்வன் என்பர் இப்புராண ஆசிரியர். "மிக்கதோர் விதியை யாரே விலக்கவல்லார்கள்" என்பனபோன்ற வாழ்வியல் உண்மைகளை இப் பெருங் காப்பியத்தில் ஆங்காங்குக் காணலாம்.

"நன்கு இது என்றொரு பொற்றளை தம்பதம்
பூட்டலாகுமோ"

"பொய்ப்பெருஞ் செல்வம் பெற்றோன் புகழ்எனக்
குறைந்தவன்றே"

என்பன போன்ற சிறந்த அறக் கருத்துக்களை ஆங்காங்குப் பெய்துள்ளார் இந்நல்லாசிரியர்: அங்கங்கே வரும் போற்றிப்

பாடல்கள், தியான சுலோகங்களாக உள்ளன. இப்புராண படனம், இவ்வாறு அறிவை நெறிப்படுத்தும் அருங் கருவியாக 'அறுமுகன் ஆடல்' விளக்கும் அருங்காப்பிய மாக விளங்குகின்றது.

கந்தன் கருணையைப் பெருக்கும் இத்தகு விரதங்களை நோற்று, வாழ்வின் உயர்நோக்கினை எய்தி இன்பம் பெறுதல் அன்புலகின் கடன் ஆகும்.

*பன்னிரு கரத்தாய் போற்றி! பசும்பொன் மாமயிலாய் போற்றி!*
*முன்னிய கருணை ஆறு முகப்பரம்பொருளே போற்றி!*
*கன்னியர் இருவர் நீங்காக் கருணைவாரிதியே போற்றி!*
*என்னிரு கண்ணே! கண்ணுள் இருக்குமா மணியே போற்றி!*

---

"ஞானசம்பந்தம்"

# சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

"ஞானசம்பந்தம்" திங்களிதழ் சமயம், இலக்கணம் இலக்கியம், கல்வெட்டு முதலிய பல கட்டுரைகளுடன் மாதமோருமுறை வெளிவருவது. தங்களது ராசிக்கேற்ற எதிர்காலப் பலனை விளக்கும் ஜோதிடமும் இதில் வெளியிடப் படுகிறது. இருபத்துமூன்று ஆண்டுகளாகச் சமயஉலகில் சிறந்த தொண்டாற்றிவருகிறது. இதில் சந்தாதாரர்களாக உள்ளவர்களும், புதியசந்தாதாரராகச்சேர விரும்புகிறவர் களும் சந்தாத்தொகையை கீழ்க்காணும் முகவரிக்குஅனுப்பி ஞானசம்பந்தம் பெற விரும்புகின்றோம்.

ஆண்டு சந்தாத்தொகை ரூ. 2—25

முகவரி :-

*மானேஜர்*
ஞானசம்பந்தம் காரியாலயம்
தருமபுரம் P. O.
மாயூரம்.

# ஞானசம்பந்தத்தின் நற்பணிகள்

உலக மக்கள் அனைவர்களுடனும் ஞானசம்பந்தம் கொண்டு வெளிவரும் நம் “ஞானசம்பந்தம்” இதழுக்கு இருபத்து மூன்று ஆண்டுகள் நிறைவுறுகின்றன. இருபத்து நான்காம் ஆண்டுப் பிறப்பாக அடுத்த இதழ் வெளிவரும்.

தருமையாதீனத்து ஆதிபரமாசாரிய குருமூர்த்திகள் திருப் பெயரால், இருபத்து நான்காவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்களால் தொடங்குவிக்கப்பெற்ற இத் திங்களிதழ் உலகிற்குப் பலவகை யிலும் பயன் தரும் முறையில் தனது பணியைச் செவ்வனே செய்துவருகின்றது என்பதை நேயர்கள் நன்கறிவார்கள்.

இறைவனது திருவருள் ஞானத்தை முதன்மையாகக் கொண்டு. அந்த மெய்ஞ்ஞான சம்பந்தத்தையே பெரும்பான்மை யும் அனைவருக்கும் அளித்துவரும் நமது ஞானசம்பந்தம், அதனோடில்லாமல், மற்றும் தமிழ்ஞானம், இசை, நாடகம் முதலிய கலை ஞானம், உலகியல் ஞானம், எதிர்கால ஞானம் முதலிய எல்லா ஞானங்களையும், எல்லாவகையாலும் அளித்துவருகின் றது. கடவுள் வழிபாட்டில் மூர்த்திகளின் தத்துவம், வழிபாட்டின் தத்துவம், திருவிழாக்களின் தத்துவம் முதலியவைகளை வெளி யிடுவது நம் ஞானசம்பந்தமே. செப்பறைச் சுவாமிகளால் எழுதி வைக்கப்பட்டிருந்து, நம் இதழின் தொடக்கத்திலே வெளியிடப் பட்ட, ‘விநாயகர் தத்துவம்’ என்னும் நூலும், அவ்வப்போது வெளிவந்துள்ள, ‘சிவபூஜா தத்துவம், நோன்பு விளக்கம். மகோற்சவ விளக்கம், கும்பாபிடேக தத்துவம்’ முதலியனவும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்களாகும்.

இன்னும், அரிய பெரிய அறிஞர்களது கருத்துக்கள்மறைந்து போகாவண்ணம் பெற்று வெளியிடும் பெருமையும் நம் ஞான சம்பந்தத்திற்கு உண்டு. செப்பறைச் சுவாமிகளது தேவார

உரைகள், "உலகெலாம்" என்றதன் விரிவுரை முதலியவற்றை நம் பழம்பேரிதழ்களிற் காணலாம். பின்னும் பின்னும் தொடர்ந்து இன்றுகாறும் அரிய தேவார திருவாசகப்பாடல்கள், திருவியமகத் திருப்பதிகக் குறிப்புக்கள் அவ்வப்பொழுது வெளி வந்து பயன் தருகின்றன.

தருமையாதீனம் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள், தாங்கள் பன்னிரு திருமுறைகளிலும் போற்றி வைத்துள்ள அநுபவப் பொருள்களைத் தங்கள் அருளுரையாக வழங்கப்பெற்று, அவற்றை முதற்கண் அருட்சுடர் ஒளியாகப் பரப்பிய பெருமை நம் ஞானசம்பந்தத்திற்கே உரியது. இப் பொழுது அவர்களது பதினான்கு சாத்திர அருளுரையை முதற் கண் அவ்வாறு கொண்டு வெளிவருகின்றது.

'சஹஸ்ராகமம்' என்னும் சிவாகமம் தொடர்ந்து விளக்கப் பட்டு வருகின்றது. சிவாலய தரிசன விதி போன்ற ஆலயத் தொடர்பான விளக்கங்கள் தனி நூல்களாகவும், கட்டுரைகளாக வும் அவ்வப்பொழுது இடம் பெற்று விளங்குகின்றன. சித்தாந்த சாத்திரங்களை அனைவரும் எளிதில் உணர வேண்டும் என்னும் கருத்தினால், 'முப்பொருள் விளக்கம்' என்னும் கட்டுரையை ஞானசம்பந்தம் வெளியிட்டது, சித்தாந்த வினாவிடையைத் தொடர்ந்து வெளியிட்டுவருகின்றது. சைவசித்தாந்த சங்கிரகம், தருக்க சங்கிரகம் முதலிய நுண்ணிய நூல்களும் நம் இதழ் வாயிலாக வெளிவந்துள்ளன.

சிவநெறியை விளக்கும் ஆங்கிலக் கட்டுரைகளையும் நம் ஞானசம்பந்தம் ஏற்று வெளியிட்டுள்ளது; இதனால் அயல்மொழி யினரும், அயல் நாட்டினரும் நம் சைவசமயத்தை அறிய வாய்ப்பு உண்டாயிற்று. திரு. C. K. S. அவர்களது, 'The Vedas and Agamas', திரு. மா. பா. அவர்களது. ,Essence of Saivlsm', திரு. S. சச்சிதானந்தம் பிள்ளை யவர்களது 'Philosophy of Saiva Siddhanta', திரு. J. M. நல்லசாமிப் பிள்ளை யவர்களது, 'The four paths' முதலிய கட்டுரைகள் குறிப்பிடத் தக்கவை.

சைவத்தொடர்பான கட்டுரைகளேயன்றித் தமிழுக்கு ஆக்கம் தரும் அரிய பல கட்டுரைகளும் நம் ஞானசம்பந்தம் கொண்டு விளங்குவது நேயர்கட்கு மகிழ்வைத் தருவதாகும். தொல்காப்பிய உரைகள் பற்றியும், சங்க இலக்கியப் பாடல்கள் பற்றியும், நன்னூல் உரைகள் பற்றியும் விளக்கங்கள் தந்த பன்மொழிப் புலவர், திரு. வேங்கடராஜலு ரெட்டியார் அவர்களது கட்டுரை, தருமையாதீனப்புலவர், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்களது கட்டுரை முதலியனவும், இன்றும் தொடர்ந்து வருகின்ற தொல்காப்பியச் சொல்லதிகார விளக்கக் கட்டுரைகள், 'தமிழ் கூறும் நல்லுலகம்' முதலியவற்றுல், அடைந்த -- அடைந்துவருகின்ற பயன்களை நேயர்கள் மறக்க மாட்டார்கள்.

'யாத்திரை நூல்கள் தமிழில் இல்லை' என்று கூறுவர். எமது ஞானசம்பந்தம் அத்தகைய நூல்களையும், கட்டுரைகளையும் அடிக்கடி வெளியிட்டு வருதல் பலரும் அறிந்ததே. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி யவர்கள், அடியார் பலருடன் அரிதிற் சென்று கண்ட கயிலைக் காட்சி, திருக்கேதார — பத்திரிநாத் யாத்திரை முதலியவை இவைகளில் சிறப்புற்று விளங்குதல் கண்கூடு.

கல்வெட்டுச் செய்திகள் ஆராய்ச்சிக்குத் துணைசெய்வன. அவைகளையும், எதிர்கால நிகழ்ச்சிகளை முன்கூட்டியே மக்கட்கு அறிவிக்கும் சோதிடப் பலன்களையும், அவ்வப்பொழுது ஆங் காங்கு நிகழும் பற்பல வகையான செய்திக் குறிப்புக்களையும் நமது ஞானசம்பந்தம் எப்பொழுதுமே வெளியிட்டுவருகின்றது. கருத்தைக் கவரும் இனிய தனிக் கட்டுரைகள், இயல் இசைப் பாடல்கள், நாடகங்கள் முதலிய பலவும் நம் ஞானசம்பந்தத்தில், உரிய இடங்களைப் பெற்றுத் திகழ்கின்றன. இன்ன பல நற்பணி களையும், இனி அடுத்து வருகின்ற ஆண்டிலும் ஞானசம்பந்தம், தனது குருவருளாலும், திருவருளாலும் மேலும் சீரிய முறையிலே சிறக்கச் செய்வது உறுதியாதலின், நேயர்கள் அனைவரும் ஞான சம்பந்தத்தைத் தொடர்ந்துபெற்றுத் தங்கள் நண்பர்களையும் பெற ஊக்குவித்து நற்பயன் எய்துவார்கள் என நம்புகிறோம்.

———o———

# வணக்கம்

ஞானசம்பந்தத்தின் இருபத்துமூன்ரும் மலர் நிறைவிதழாக வெளிவரும் இவ்விதழ், அறுமுகன் ஆடலை முன்னர்க்கொண்டு விளங்குகின்றது. சாத்திரங்களில், உமாபதி சிவாசாரியார் தமது அருள்ஞான நெஞ்சத்தைத் தம் அருளாசிரியர்பால் ஆராமையோடு தூதாக அனுப்பும் முறையில் தத்துவக் கருத்துக் களைப் பொதிந்து வைத்துச் செய்தருளிய நெஞ்சுவிடுதூதின் அரிய முடிபினை, ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் இவ்விதழில் தங்கள் அருளுரையாக அள்ளி வழங்கியிருப்பது, நெஞ்சை அள்ளும் நிலையினதாய் நேயர்களது உள்ளங்களை அள்ளுறச் செய்யும்.

அப்பர் அருந்தமிழுள் ஒன்றிற்கு அரிய விளக்கந் தந்து மிளிர்கின்ற, 'நடுவே நின்ற விலங்கு' என்ற தனிக்கட்டுரையும், 'பொறுமையின் பிறப்பிடம்' என்னும் தலைப்பில், இராமபிரானது சீரிய பண்புகளைச் சித்திரித்து நிற்கும் தனிக்கட்டுரையும் இவ் விதழினை அழகுசெய்கின்றன.

சிவாகமப் பொருளை விளக்கும் 'சஹஸ்ராகமம்', சைவ சித்தாந்தக் கருத்துக்களை விரிக்கும் 'சித்தாந்த வினுவிடை', தொல்காப்பியத்தின் அரிய பொருளை எளிமைப்படுத்தி வரும் 'தொல்காப்பியச் சொல்லதிகார விளக்கக் கட்டுரைகள்', சங்க இலக்கியங்களின் தனிப்பெரும் பண்பினை இனிமையாக எடுத்துக் காட்டிச் செல்லும் 'தமிழ்கூறும் நல்லுலகம்' என்னும் தொடர் கட்டுரைகள் இவ்விதழிலும் தொடர்ந்துவந்துள்ளன.

பின் நிகழ்வனவற்றை முன்பே அறிவிக்கும் 'எதிர்காலம்', நிகழ்ச்சிகள் பலவற்றையும் குறிப்பிடும் 'செய்திகள்' என்பன வழக்கம்போலவே அமைந்துள்ளன. எல்லாவற்ருலும் நேயர் கள், ஞானசம்பந்தத்தின் இம்மலர் நிறைவின் பயனை நிரம்பப் பெறுவார்களாக.

---

உ
குருபாதம்
திருத்தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகள் வழங்கியருளிய

# அருளுரை

---

## நெஞ்சுவிடு தூது

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிஎன் தம்பிரான் - அம்புவியோர்
போற்றுந் திருவடிஎன் தன்றலைமீ தேபொறித்தோன்
ஏற்றின் புறத்தமைந்த எங்கோமான் - சாற்றுவார்
சாற்றும் பொருளான் தனிமுதல்வன் தானல்லான்
வேற்றின்பம் இல்லா விளங்கொளியான் - போற்றுங்
குருவேட மாகிக் குணங்குறியொன் றில்லாப்
பெருவேட மாய்நிறைந்த பெம்மான் - கருவேடம்
கட்டுமுருக் கட்டறுத்தான் கற்றவர்வாழ் தில்லையான்
எட்டுமவர்க் கெட்டா இயல்பினன் - மட்டவிழ்தார்
வானோன் பவனி வரக்கண்டு வல்வினையேன்
ஏனோரும் ஏத்துதல்கண் டேத்தினேன் - தான்என்னைப்
பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக்கொத்தைஎல்லாம்
நீத்தான் நினைவுவே றுக்கினன்.

—உமாபதிதேவ நாயனர்.

புலவர்கள் தங்களுக்குப் பரிசு வழங்கி ஆதரிக்கின்ற அரசர்களையும், வள்ளல்களையும் சிறப்பித்துப் பாடுவதற்குத் தொண்ணூற்றாறு வகையான பிரபந்தங்களை வகுத்துக்கொண்டு, அம்முறையிலே அவர்களைப்பாடி, உலக வாழ்க்கையில் வாழ்ந்தனர். அருட் புலவர்களாகிய பெரியோர்கள், மக்களைப் பாடாமல்,

அப்பிரபந்தங்களையெல்லாம் இறைவனுக்கே ஆக்கி, அருள் வாழ்க்கையில் வாழ்ந்தார்கள். அப்பிரபந்த வகையில் ஒன்று, 'தூது' என்பது.

வீரம், கொடை, புகழ் முதலியவற்றில் தனக்கு நிகரில்லாத தலைவன் ஒருவன் பவனிவரும்பொழுது, அவனைக் கண்டு அவனிடத்தில் தனது உள்ளத்தைப் பறிகொடுத்த தலைவி ஒருத்தி, பின்பு ஆற்றாமை மிகுந்து, அத்தலைவனிடம் தனது ஆற்றாமையைச் சொல்லி, அவனது மாலையை வாங்கிவருமாறு, வண்டு, கிளி, மேகம், நெஞ்சு முதலியவைகளைத் தூதாக அனுப்புவது போல அமைத்து, அத் தலைவனது பெருமை எல்லாம் விளங்கப் பாடுவதே, 'தூது' என்னும் பிரபந்தமாகும். இறைவன்மீது செய்யப்பட்ட தூதுப் பிரபந்தங்கள் பல உண்டு; அவைகளெல்லாம் தோத்திரங்களே யாகும். ஆயினும், சாத்திரத்திலும் தூது ஒன்று இருத்தல் நாம் வியந்து போற்றுதற்குரியது, அதுவே, உமாபதிசிவாசாரியார் செய்துள்ள நெஞ்சுவிடு தூது.

வண்டு, மேகம், கிளி முதலிய வெளிப்பொருள்களைத் தூதாக அனுப்புதல், புறத்தில் உள்ள தலைவர்களுக்குப் பொருந்தும். ஆனால், அகத்தில் உள்ள தலைவனாகிய இறைவனிடம் தூதாக அனுப்புவதற்கு, அகத்தில் உள்ள நெஞ்சே பொருந்துவதாகும். இதனால்தான், உமாபதிசிவாசாரியார், சாத்திரத்தில் நெஞ்சினைத் தூது விடுவதாக அருளினார்.

மானிடத் தலைவர்களிடம் வண்டு முதலியவைகளைத் தூது விடுவதுபோலப் பாடுவது, கற்பனையேயன்றி, உண்மையன்று, ஆனால், இறைவனிடம் தூது விடுவது அவ்வாறன்றி உண்மையேயாகும். இறைவனிடம் வண்டு முதலியவைகளைத் தூது விடுவதாகப் பாடினாலும், வண்டு முதலியவைகள் உள்ளுறையாக நெஞ்சையே குறிக்கும். அதனால், உமாபதிதேவ நாயனார் அவ்வாறெல்லாம் மறைத்துச் சொல்லாமல், வெளிப்படையாக நெஞ்சையே தூதாக ஆக்கி அருளுகின்றார்.

இறைவனைத் தலைவனாகக்கொண்ட தூதுப் பிரபந்தங்களில், தலைவி என்பது, அவனது திருவருளைப் பெற்ற அடியார்களையே குறிக்கும். தலைவி பிரிவாற்றாமல் வருந்துதல் என்பது, அடியார்கள் இறைவனை அடையாமல் இவ்வுலகில் வாழ்ந்திருக்க ஆற்றாத நிலையையே குறிக்கும். வண்டு முதலியவை, ஞானமயமான

அவர்களது உள்ளங்களையே குறிக்கும். வண்டு முதலியவைகளை நோக்கிக் கூறும் சொற்களால் தலைவிக்கு ஆற்ருமை சிறிது தணிந்து இன்பம் உண்டாவதுபோலக் கற்பனையால் கொள்ளப் படும். இறைவனைப் பற்றி வரும் தூதுப் பாடல்களால், உண்மை யிலேயே வாதனுமலம் நீங்கிச் சிவானந்தம் பெருகும். எனவே, இத்தகைய தூது நூல்களை இயற்றுதற்கும், அதனை ஓதி இன் புறுதற்கும் சிவஞானம் பெற்றவர்களே உரியவர்களாவர்.

உமாபதி சிவாசாரியார் தமது சாத்திரமாகிய நெஞ்சுவிடு தூதில், தலைவி இறைவனது பவனியைக் கண்டதாகக் கூறு மிடத்தில், இறைவனென்றும், தமது ஆசாரியராகிய மறைஞான சம்பந்தரென்றும் அறிந்துகொள்ள முடியாதபடி இருவரையும் அத்துணை ஒற்றுமைப்படக் கூறுகின்ருர். ஏனெனில், தாம் கண்ட இறைவன் மறைஞானசம்பந்தரேயாவர். 'இறைவனே மானிடச் சட்டை சாத்திக் குருவாய் வருகின்ருன்' என்பதும், 'குருவும், இறைவனும் வேறல்லர்' என்பதும் சாத்திரங்களின் முடிவாகும்.

இதில், தம் குருவை, 'மறைஞானசம்பந்தர்' என்று கூருமல். 'சம்பந்தர்' என்றே கூறுகிருர். இதைப் பார்க்கும் பொழுது எங்கள் ஆதி பரமாசாரிய சுவாமிகளாகிய குருஞான சம்பந்தர் வழியில் எட்டாவது மகாசந்நிதானமாக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ அழகிய திருச்சிற்றம்பல தேசிக ஞானசம்பந்த பரமா சாரிய சுவாமிகள் மீது, அவ்வாசாரியர் பெயரையே உடைய ஆதீன முனிவராயிருந்து, சொர்க்கபுரம் மடாலய ஸ்தாபகராய் விளங்கிய மாமுனிவர் ஒருவர் செய்துள்ள கிளிவிடுதூது நினை விற்கு வருகின்றது. அவர் அதிலும் சாத்திரக் கருத்துக்களையே பெரிதும் எடுத்துக் கூறியுள்ளார்,

நெஞ்சுவிடு தூதில் தலைவி, 'இறைவன் என்று உள்ளானே அன்றே நானும் உள்ளேன் ; ஆனுல், அவன் பிறப்பிறப்பு இல்லா தவனுய் இருக்க யான் பிறப்பிறப்பில் அகப்பட்டு எத்துணையோ துன்பங்களுக்கு ஆளாய் அலைகின்றேன் ; இந்த அலைவு நீங்கி. நான் நிலைத்திருக்கும் வழியை நீ நினைத்தல் வேண்டும்' என்று நெஞ்சினை வேண்டிக் கொள்கின்ருள். இம்முறையில் முதலில் இறைவன் இயல்புகளும், அவைகளை யடுத்து உயிரின் இயல்பு களும், அவற்றிற்குப்பின் தளை இயல்புகளும் ஆக. 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களின் இயல்புகள் பேசப்படு கின்றன. தளை இயல்பு கூறுமிடத்து, உமாபதிசிவாசாரியார்,

" தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர் "

என்னும் திருக்குறளை அப்படியே எடுத்துவைத்து, அதனை, " நிலைத்தமிழின் - தெய்வப் புலமைத் திருவள்ளுவர் உரைத்த-மெய்வைத்த சொல் " என்று பாராட்டியிருத்தல் அறிந்து இன்புறத்தக்கது,

முப்பொருள்களின் இயல்பைக் கூறிய பின்பு, மீண்டும் இறைவன் இயல்பைத் தனியாக எடுத்து, தசாங்கங் கூறும் முறையில் தலைவி சிறப்பித்துக் கூறுகிறாள். தலைவனிடம் தூது அனுப்பும் பொழுது அவனது மலை, ஆறு, நாடு, ஊர், தார், குதிரை, யானை, கொடி, முரசு, ஆணை என்னும் பத்து உறுப்புக் களையும் கூறுதல் முறை. திருவாசகத்திலும், ' திருத்தசாங்கம் ' என்னும் ஒரு பகுதி இருத்தலைக் காணலாம், மேற்சொல்லிய கிளிவிடு தூதிலும் இத் தசாங்கங்கள் சொல்லப்படுகின்றன. கந்தர் கலிவெண்பாவிலும் குமரகுருபரர் முருகப்பெருமானுக் குரிய தசாங்கங்களை எடுத்துக் கூறியுள்ளார்.

' இத்தகைய தசாங்கங்களை யுடைய பெருந்தலைவனாகிய இறைவன் என் பொருட்டு என்னைப்போலவே மானிடச் சட்டை தாங்கிக் குருவாய் வந்தான் ' என்று தலைவி கூறுகிறாள். அப் பகுதியே மேல் தரப்பட்டது.

' அந்தக் குருவடிவமே சம்பந்த மாமுனி; அவனே என் இறைவன் ; சமயத்தார் அனைவரும் சொல்லும் பொருளாயும், அவர்களால் அறியப்படாத ஒப்பற்ற முதல்வனாயும், குணங் குறிகளை யெல்லாம் கடந்தவனாயும் உள்ள அவன் சிலருக்கு இடப வாகனத்தின்மேல் வந்து காட்சிதருவான். யாவருக்கும் தில்லையம்பலத்துள் நடனக் காட்சியை வழங்குகின்றான். எனக் குக் குருவாகி வந்து அருள்செய்து, யாவராலும் போற்றப்படும் தனது திருவடிகளைச் சிறியேனாகிய எனது தலைமேற் சூட்டியருளி னான் ; அவன் பவனிவரும்பொழுது, எல்லாரும் கண்டு துதிப்பது போல, நானும் கண்டு துதித்தேன் ; ஆனால், என்னை அவன் தனது பார்வையாலே வேறுபடுத்திவிட்டான் ; பஞ்சமலங்களும் அப்பொழுதே ஒழிந்தன ; என் குணம், வேறு எதனையும் நினை யாமல். அவனையே நினைவதாயிற்று ; தத்துவக் கூட்டங்களின் தொடர்பெல்லாம் அற்றொழிந்தன. பொன்னும், பொருளும், பூமியும் எல்லாம் பொய்யாகி. வெண்ணீறும். வேடமும்,

பூசையுமே மெய்யாயின, அஞ்செழுத்தின் உள்ளீடு அனைத்தும் தோன்ற, அதனை நெஞ்சமுழுத்தி உச்சரிப்பதிலே எனக்கு ஆர்வம் மிகுந்தது என்று இவ்வாறெல்லாம் தலைவி தன் நிலையை எடுத்துக் கூறுகிறாள். கிளிவிடு தூதிலும்,

"... ... ... ... ... பெருவாழ்வு
சேர்ந்த தருமைதனில் சேர்ந்தொளிர்என் போல்உருவம்
சார்ந்து பலகலைகள் சந்ததமும்—தேர்ந்த வன் பா
சம்பந்தம் நீக்கவரு சற்குருவாய் மெய்ஞ்ஞான
சம்பந்தன் என்னவோர் பேர் தாங்கி—எம்பந்தம்
நீக்கும்எல்லை பார்த்திருந்து நேர்ந்தவுடன் என்னையழைத்து
ஆக்கினான் தன்கண் அருள்நோக்கம்"

என்றும்,

"தன் பாத இணைமலர்என் புன்தலைவைத்து
ஆழ்ந்தார்க ளாலும் அறிவரிய—காய்ந்த
பயிருக்கு மேகமது பாலித்தாற் போலென்
உயிருக்குச் சொன்னான் ஒருசொல்"

என்றும் கூறியுள்ளார்.

"கண்டேன்இப் பாசங் கழிந்தேன் அமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன் - வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்ர காசனையே நான்"

என்ற சிவபோகசாரமும் இங்கு அறியத் தக்கது.

இவ்வாறு அருள்செய்த இறைவனை நீங்கித் தனியே இருக்கலாற்றாமையினாலே, தலைவி தன் நெஞ்சை அழைத்து, அவனிடம் தூது செல்லும்படி அனுப்புகிறாள், அனுப்பும்பொழுது வழி சொல்லி அனுப்புகின்றவள், 'இடையிலே சிலசில தீங்கான இடங்கள் உண்டு; அங்கேயெல்லாம் சென்று வீழாமல் விலகிச் செல்' என்று எச்சரிக்கை செய்து அனுப்புகின்றாள்; 'மகளிர் இன்பந்தான் முத்தி' என்று வாதாடும் உலகாயதக் கூட்டம், 'நானே பிரம்மம்' என்று உபதேசிக்கும் ஏகான்மவாதக் குழு' 'ஓர் உயிரைக் கொல்வதுதான் பாவம்; ஒருவன் கொன்றுவந்து கொடுப்பதைத் தின்பது பாவமாகாது' என்று சொல்லும் புத்தப்பள்ளி, 'உடலை வாட்டி வதக்குவதுதான் முத்தி' என்று கூறும் சமணப்பாழி, 'கர்மமே பிரம்மம்; வேறு பிரம்மம் இல்லை'

என்கின்ற மீமாம்சகர் தொகுதி, திருநீற்றையும், சிவனடியார் வேடத்தையும், சிவாலயத்தையும் தொடவும், பார்க்கவும், மிதிக்கவும் கூடா என்னும் சைவ நிந்தகர்களது திரள் முதலியவைகளே அந்தத் தீய இடங்கள். இவைகளையெல்லாம், நெஞ்சே கண்ணெடுத்தும் பாராமல், என் தலைவன் சம்பந்த மாமுனிவன் வீற்றிருக்கின்ற கொலுவை அடைந்து, "போற்றி சயசய போற்றி" என்று சொல்லி அவன் அடியில் வீழ்ந்து வணங்கி, 'உன் பவனியைத் தரிசித்த ஒருபெண், உலகத்தில் வரும் பல வகை இன்னல்களுக்கு ஆளாதல் பொருந்துமோ' என்று சொல்லி அவனது கொன்றை மாலையை விரைவில் வாங்கிக் கொண்டு திரும்பி வா என்று விடுக்கின்றாள்.

'தலைவன் தனது மாலையைக் கொடுத்தனுப்புவானாயின், தலைவியிடத்தில் தவறாது வந்து சேர்வான்' என்பது அக்காலத்து முறை. அதனாலேயே, தூது அனுப்பும் தலைவி, தலைவனது மாலையை எவ்வாறேனும் இரந்து வாங்கி வரவேண்டும் என்று சொல்லியனுப்புவது வழக்கம். அம்முறையிலேயே இங்கும் கூறப்பட்டது. இந்நெஞ்சுவிடு தூதின் அவ்வளவு கருத்தினையும் மிகச் சுருக்கமாகக் கொண்டு நிற்கின்றது இதன் இறுதியிற் காணப்படும் ஒரு தனி வெண்பா :

"வெம்பும் பிறவிஅலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் தார்வாங்கி—அம்புந்தும்
வஞ்சமே வும்விழியார் வல்வினையெல் லாமகல
நெஞ்சமே வாராய் நினைந்து"

கிளிவிடு தூதும்,

"குறியொன்று காட்டுதற்குக் கோவே கரந்த
வெறிகுன்றாக் கொன்றைவெறி யா க்கி—வறியேன்றன்
கையில்தா என்றதனை வாங்கிக் கடிதுகொண்டிங்கு
உய்யயான் வாராய் உவந்து"

என்றே முடிகின்றது.

ஞானாசாரியரைப் பிரிந்து ஆற்றாத ஞான சீடர்து நிலையை விளக்கும் முறையில் ஞானமயமாய் அமைந்துள்ள நெஞ்சுவிடு தூதாகிய இந்த ஞானசாத்திரத்தினை, ஞானத்தை விரும்புவோர் அனைவரும் நன்கு ஓதி யுணர்ந்து, ஞானத்தைப் பெற்று உய்வார்களாக.



திருநெல்வேலியிலுள்ள தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருமடத்தின் தோற்றம்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
சிதம்பரம் திரு. கனகசபை பிள்ளை அவர்களுக்குப்
பொன்னாடை போர்த்தி ஆசிகூறுதல்

# தொல்காப்பியச் சொல்லதிகார - - - விளக்கக் கட்டுரைகள்.

பண்டித வித்துவான், திரு. கு. சுந்தரமூர்த்தி

( மலர் 23, இதழ் 11, பக்கம் 634 இன் தொடர்ச்சி )

## 6. காலவழுவமைதி :

எழுவகை வழுவமைதிகளுள் காலவழுவமைதி நீங்கலாக ஏனைய ஆறும் கிளவியாக்கத்துள் விரித்துக் கூறப்பட்டன. வினைச்சொல் காலமொடு வருதலை இலக்கணமாக உடைய தாகலின் அதற்கு இயைபுடைய காலவழுவமைதியை ஈண்டு விரித்துக் கூறுகிறார்.

செய்தென்னும் வினையெச்சம் இறந்தகாலத்திற்கு உரிய தாகும். அது எதிர்காலத்தை உணர்த்தும் சொல்லோடு இயை தலும் உண்டு. (எ-டு) 'நீ உண்டு வருவாய்' என்புழி உண்டு என்னும் செய்தெனெச்சம் வருவாய் என்னும் எதிர்காலச் சொல்லோடு இயைந்தவாறு காண்க.

இறந்தகாலச் சொல்லொடு எதிர்காலச்சொல் இயைதல் வழூவாயினும் அமைகவென வழுவமைத்தவாறு (42).

மூன்று காலத்திற்கும் ஒத்து இயங்கும் இயல்பினையுடைய பொருள்களை நிகழ்காலத்திற்குரிய செய்யுமென்னும் சொல்லால் சொல்லுதல் மரபாம். (எ-டு) 'மலை நிற்கும்' என்புழி மலை என்னும் சொல் முக்காலத்திலும் ஒத்தியலும் பொருளாம். அது நிற்கும் என்னும் நிகழ்காலச் சொல்லால் சொல்லப்பட்டவாறு காண்க. இதனையே நன்னூலாரும்,

> " முக்காலத்தினும் ஒத்தியல் பொருளைச்
> செப்புவர் நிகழுங் காலத் தானே " (பொ, 32)

எனக் கூறுமாறு காண்க.

முக்காலத்திற்கும் ஒத்த பொருளை நிகழ்காலமாகிய ஒரு காலச் சொல்லால் சொல்லுதல் வழுவாயினும் அமைகவென வழுவமைத்தவாறு (43).

நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் சொல்லவேண்டிய வினைச்சொற்களை விரைவுபற்றி இறந்த காலத்தாற் சொல்லுதலும் உண்டு.

(எ - டு) " மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார் "

இதன்கண் ஏகுவான் என எதிர்காலச் சொல்லாற் சொல்ல வேண்டுவது விரைவுபற்றி ஏகினான் என இறந்தகாலச் சொல்லாற் கூறியவாறு காண்க.

" அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின், 'ஏகினா'னென இறந்த காலத்தாற் கூறினார்; என்னை ?

" வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
ஓராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர் "

என்பது ஒத்தாகலின், என வரும் பரிமேலழகர் உரையும் காண்க.

எதிர்காலத்திலும் நிகழ்காலத்திலும் சொல்லவேண்டிய சொல்லை இறந்த காலத்தாற் கூறுதல் வழுவாயிலும் அமைக வென வழுவமைத்தவாறு (44).

உலகத்தாரால் சிறந்ததென்று மதிக்கப்பட்டதொரு வினையது பயனை ஒருவனொடு கூட்டிச் சொல்லுங்கால் எதிர்காலத்தில் சொல்லுதலே மரபு. அங்ஙனம் ஒருவனைக் குறித்துச்சொல்லாது அவ்வினையது பயனைச் சொல்லின் நிகழ்காலத்தால் சொல்லினும் வழுவில்லை என்பதாம்.

'ஒருவன் தவஞ்செய்து சுவர்க்கம் புகுந்தான்' எனலாம், அல்லது 'புகுவான்' எனலாம், இது ஒருவனைக் குறித்துச் சொல்லியவழி வருமியல்பாம். இங்ஙனம் ஒருவனைக் குறித்துச் சொல்லாது அச்சிறப்பான் வினையது பயனைச் சொல்லின்,

'எவனொருவன் தவஞ்செய்தான் அவன் சுவர்க்கம் புகுவான்' என எதிர்காலத்துச் சொல்லுதலே மரபு. அங்ஙனமன்றி 'எவனொருவன் தவஞ்செய்தான் அவன் சுவர்க்கம் புகும்' என நிகழ்காலத்தாற் சொல்லுதலும் உண்டு, அது வழுவாயினும் அமைகவென வழுவமைத்தவாறு (45).

இங்ஙனம் செல்லின் இங்ஙனம் ஆகும் என்னும் இயல்பைச் சொல்லுமிடத்தும், இது நிகழின் இது ஆகும் என நூலாலோ அல்லது பிறவற்றாலோ தெளிந்து ஒன்றனைச் சொல்லுமிடத்தும் இறந்தகாலச் சொல்லாலோ அல்லது நிகழ்காலச் சொல்லாலோ சொல்லப்படும் என்பதாம். (எ-டு) ஆறலை கள்வர் இயங்கு கின்ற காட்டிடத்து ஒருவன் செல்ல முற்படின், இங்ஙனம் ஏற்கனவே அக்காட்டிடத்துச்சென்றாரெல்லாம் ஆடை முதலியன இழந்தமை இயற்கையெனக் கண்டானொருவன் செல்லுகின்ற வனது ஆடை இழப்பதன் முன்னும் ஆடை இழந்தான் என்றோ அல்லது ஆடை இழக்கின்றான் என்றோ சொல்லுதலும் உண் டென்பதாம். எறும்பு முட்டை கொண்டு மேட்டு நிலத்திற்குச் செல்லின் மழை பெய்தல் உண்டு என்பதை நூலால் தெரிந்த ஒருவன், எறும்பு முட்டை கொண்டு மேட்டு நிலத்திற்குச் செல்லுதலைக்காணின் மழை பெய்யா முன்னும் 'மழைபெய்தது' என இறந்தகாலச் சொல்லாலோ 'மழை பெய்கின்றது' என நிகழ்காலச் சொல்லாலோ சொல்லுதலும் உண்டென்பதாம்.

எதிர்காலச் சொல்லால் சொல்லவேண்டியதை இறப்பிலோ அல்லது நிகழ்விலோ சொல்லுதல் வழுவாயினும் அமைகவென வழுவமைத்தவாறு (48).

இங்ஙனம் விரைவு (44), மிகுதி (மிக்கதன் மருங்கு) (45) இயற்கை, தெளிவு (48) என்ற நான்கு பொருளிலும் முக்காலங் களும் மயங்கி வருதலை ஒருங்கு தொகுத்து,

> "விரைவினும் மிகவினுந் தெளிவினும் இயல்பினும்
> பிறழவும் பெறூஉமுக் காலமும் ஏற்புழி" (பொது : 33)

என நன்னூலாரும் கூறுதல் காண்க.

இறப்பும் எதிர்வுமாகிய இருகாலங்களும் தம்மில் ஒன்றற் கொன்று மயங்குமென்பதாம். எனவே இறப்பில் எதிர்வும், எதிர்வில் இறப்பும் எனக்காலங்கள் மயங்கு மென்பதாயிற்று.

(எ-டு) 'யாம் பண்டு விளையாடுவது இக்கா' என்புழிபண்டு என்னும் இறந்தகாலச் சொல்லுடன் விளையாடுவது என்ற எதிர்காலச்சொல் வந்தவாறு காண்க. 'நாளை அவன் வாளொடு வெகுண்டு வந்தான் பின் நீ என் செய்குவை' என்புழி நாளை என்னும் எதிர்காலச் சொல்லுடன் வந்தான் என்ற இறந்தகாலச் சொல் வந்தவாறு காண்க (50).

இவ்விரு காலங்களே யன்றி நிகழ்காலமும் இறப்பு எதிர் வாகிய இரு காலங்களோடு மயங்குமென்பதாம். (எ-டு) 'இவள் பண்டு இப்பொழிலகத்து விளையாடும்' என்புழி பண்டு என்னும் இறந்தகாலச் சொல்லுடன் விளையாடும் என்னும் நிகழ்காலச் சொல் வந்தவாறு காண்க. 'நாளை வரும்' என்புழி நாளை என்னும் எதிர்காலச் சொல்லுடன் வரும் என்னும் நிகழ் காலச் சொல் வந்தவாறு காண்க.

காலங்கள் ஒன்றோடொன்று மயங்காது வருதலே இயல்பு. அங்ஙனமன்றி மயங்கிவரினும் அமைகவென வழுவமைத்தவாறு (51).

இங்ஙனம் சேனவரையர் உரைகண்டனரெனினும் இறப்பும் எதிர்வும் தம்முன் மயங்குவதைச் சென்ற நூற்பாவானும், இறப்பு நிகழ்வு எதிர்வு ஆகிய மூன்று காலமும் தம்முள் மயங்குதலை இந்நூற்பாவானும் கூறினரென்பது இளம்பூரணர் கருத்தாகலின், இக்காலத்தார் கூறுமாறுபோல இறப்பிலிறப்பு, இறப்பில்நிகழ்வு, இறப்பில் எதிர்வு, நிகழ்விலிறப்பு, நிகழ்வி லெதிர்வு, நிகழ்வில் நிகழ்வு என்ற பாகுபாடுகளையும்; இக் காலத்தார் எதிர்காலம் ஒன்றே என்ன, எதிர்வில் நிகழ்வு, எதிர்விலிறப்பு, ஆகிய பாகுபாடுகளையும் பண்டைக்காலத்துக் கொண்டிருந்தனர் என அறியலாம். ஆனால் இவற்றையெல் லாம் ஒரு காலத்தில் பிறிதொரு காலம் சென்று மயங்குவ தாகவே கருதினர். ஆயின் இக்காலத்தார் இதனைப் பாகுபாடு களாகக் கொண்டனர். இவ்வளவன்றி, காலம் மூன்றேயன்றி இக்காலத்தார் சொல்லும் பாகுபாடுகளையெல்லாம் பண்டை யாசிரியர்கள் நினைந்திலர் என்னும் கூற்றுப் பொருந்துவ தன்றும்.

[ தொடரும் ]

# சஹஸ்ராகமம்

சிவாகம வித்துவான்

திரு. S. சுவாமிநாத சிவாசாரியார்

(மலர் 23, இதழ் 11, பக்கம் 642 இன் தொடர்ச்சி)

हुनेच्चूतं स्वप्रमाणं भित्वाऽष्टौ नालिकेरकम् ।
लिकुचं स्वप्रमाणेन कण्टकं त्वक् विसर्ज्य च ॥ 428

त्रिंशदंशेन भागेन भित्वातु पनसं हुनेत् ।
अतिबालं सूरणं च पद्मकन्दं च नीलकम् ॥
विभीति फलमात्रेण कन्दं भित्वातु होमयेत् ॥ 429

மாம்பழத்தை முழுசாகவும் தேங்காயை எட்டில் ஒரு பங்காகவும் ஹோமம் செய்யவேண்டும். இவ்வாறு எலிமிச்சம்பழம் முழுப்பழமாக ஹோமம் செய்யவேண்டும். முள்ளுள்ள பழங்களை தோல் உறித்து ஹோமம் செய்யவேண்டும். பலாப்பழத்தை முப்பதில் ஒருபங்காக ஹோமம் செய்யவேண்டும், சேம்பு, கருணை, தாமரைக்கிழங்கு, நைதல்க்கிழங்கு முதலியவைகளை கழற்சிக்காயளவு துண்டு துண்டாக ஹோமம் செய்ய வேண்டும்.

चन्दणं चणमात्रेण तथा मृगमदद्वयम् ।
चन्द्र कुंकुम काश्मीर कस्तूरी कृष्णगंधकान् ॥ 430

माषवत्गुग्गुलुं धूपं बदरीफलवद्धुनेत् ।
उशीरं जलपिङ्गं च मरू दमन तालकम् ॥ 431

द्वयंगुलं यथा तद्वत् श्रीपत्रं पद्मपुष्पकम् ।

சந்தனம், கொண்டக்கடலை அளவு ஹோமம் செய்யவேண்டும். இவ்வாறு புனுகு, சவ்வாது, பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ,

கோரோசனை, கஸ்தூரி முதலியவைகளை உளுந்து அளவு ஹோமம் செய்யவேண்டும். குங்கிலியம், சாம்பிருணி இவைகளை இலந்தைக்கனி அளவும் விளாமிச்சைவேர், வெட்டிவேர், மரு. மருக்கொழுந்து, பச்சிலை இவைகளை இரண்டங்குல ப்ரமாண முள்ளதாகவும் ஹோமம் செய்யவேண்டும். வில்வம், பஞ்ச புஷ்பம் அதாவது ஐந்துவகை புஷ்பங்கள் அதனதன் அளவுடன் ஹோமம் செய்யவேண்டும் (பஞ்சபுஷ்பம் என்பது, சாமந்தி, சம்பகம், மல்லிகை, முல்லை, ஜாதி இவைகளாம்)

जातीफलं च तांबूलं एला लवङ्गसंयुतम् ॥ 432

करेण जुहुयाद्द्रव्यं स्रुवपूर्णेन वा हुनेत् ।
स्रुचावटेन संपूर्णां पूर्णाहुतिमथाऽचरेत् ॥ 433

ஜாதீபலம், தாம்பூலம், ஏலக்காய், கிராம்பு இவைகளைச் சேர்த்து கையாலோ அல்லது சுருவத்தாலோ நிறைந்ததாக ஹோமம் செய்யவேண்டும், ச்ருக்கில், குழிநிறைந்த நெய்விட்டு பூர்ணாகுதியைச் செய்யவேண்டும்.

पलाशं सद्यमंत्रेण मूलेनाऽज्यंतु होमयेत् ।
अघोरेण चरुं हुत्वा लाजं तत्पुरुषेण तु ॥ 434

सक्तु च वाममंत्रेण धान्यानीशान मंत्रतः ।
समिद्द्रव्याणि सर्वाणि हुनेत्पूर्वं प्रथानके ॥ 435

பொரசம் சமித்தை ஸத்யோஜாதம் என்ற மந்திரத்தாலும், நெய்யை மூலமந்திரத்தாலும் ஹோமம் செய்யவேண்டும், சருவை அகோர மந்திரத்தாலும் பொரியை தத்புருஷமந்திரத்தாலும், சத்துமாவை வாமதேவமந்திரத்தாலும். மற்ற தானியங்களை ஈசான மந்திரத்தாலும் ஹோமம் செய்யவேண்டும், ஆனால் சமித்து முதலிய எல்லாத் திரவியங்களையும் ப்ரதானகுண்டத்தில் முதலில் ஹோமம் செய்யவேண்டும்.

पश्चात् पूर्वादिकुण्डेषु होमशेषं ततो हुनेत् ।
हुनेदीशे च निष्पावमपामार्गं प्रधानके ॥ 436

பிறகு கிழக்கு முதலிய உப குண்டங்களில் மீதியுள்ள திரவியங்களை ஹோமம் செய்யவேண்டும். ஈசானத்தில் உள்ள

ப்ரதான குண்டத்தில் மொச்சைக் கொட்டையையும் நாயுருவி யையும் ஹோமம் செய்யவேண்டும்.

अश्वत्थं गोधूमं पूर्वे याम्ये तिलमुदुंबरम् ।
अढकं च वटे सौम्ये प्लक्षमुद्गं च पश्चिमे ॥ 437

शमी च सर्षपं चाग्नौ वैशान्यामर्कमाषकम् ।
खादिरं शालि नैरृत्यां वायव्यां चण बिल्यकम् ॥ 438

नैत्रस्याम्रं च नीवारं शिवकुण्डे हुनेत्बुधः ।
अस्त्रस्य वैणवं दूर्वा तथा च शिव कुण्डके ॥ 439

எல்லா சமித்துகளும் எல்லாத் திரவியங்களும் எல்லாக் குண்டங்களிலும் ஹோமம் செய்வது சாதாரணமாகும். விசேஷ மாக ஒவ்வொரு குண்டங்களுக்கும் சமித்துதிரவியங்கள் ஹோமம் செய்யப்படவேண்டும், அம்முறையில் அததற்குரிய விசேஷத் திரவியங்களோவெனில், கிழக்கில் உள்ள குண்டத்தில் பூஜிக்கப் படும் தத்புருஷம் என்ற மந்திரத்தின் பொருட்டு அரசம் சமித் தும் கோதுமை தான்யமும் ஹோமம் செய்யவேண்டும். இது போல், தெற்கிலிருக்கும் குண்டத்தில் பூஜிக்கப்படும் அகோர மந்திரத்தின்பொருட்டு அத்தி சமித்தும், எள் தான்யமும் ஹோமம் செய்யவேண்டும். வடக்கிலுள்ள குண்டத்தில் பூஜிக்கப் படுகின்ற வாமதேவமந்திரத்திற்கு ஆலம் சமித்தும், துவரை தான்யமும் ஹோமம் செய்யவேண்டும். மேற்கிலுள்ள குண்டத் தில் பூஜிக்கப்படுகின்ற சத்யோஜாத மந்திரத்திற்கு இச்சி சமித் தும் பயரு தான்யமும் ஹோமம் செய்யவேண்டும். இவ்வாறு தென்கிழக்கு குண்டத்தில் பூஜிக்கப்படும் ஹ்ருதய மந்திரத்திற்கு வன்னி சமித்தும் கடுகு தான்யமும் ஹோமம் செய்யவேண்டும். வடகிழக்குக் குண்டத்தில் பூஜிக்கப்படும் சிரோமந்திரத்திற்கு வெள்ளெருக்கு சமித்தும் உளுந்து தான்யமும் ஹோமம் செய்ய வேண்டும். தென்மேற்கு குண்டத்தில் பூஜிக்கப்படும் சிகா மந்திரத்திற்கு கருங்காலி சமித்தும் சம்பாநெல்லும் ஹோமம் செய்யவேண்டும். வடமேற்கிலுள்ள குண்டத்தில் பூஜிக்கப் படும் கவசமந்திரத்திற்கு வில்வ சமித்தும் கடலையும் ஹோமம்

செய்யவேண்டும். இவ்வாறு பிரதான குண்டத்தில் பூஜிக்கப் படுகின்ற நேத்திர மந்திரம் அஸ்திர மந்திரம் இவ்விரண்டு மந்திரங்களுக்கும் முறையே மா சமித்து அருகு என்ற சமித்து களும் நீவாரம் என்ற தான்யமும் மூங்கலரிசியும் ஹோமம் செய்ய வேண்டும்.

दिग्विदिक्षु च कुण्डेषु तत्तन्मंत्रेण होमयेत् ।
समिदाज्य चरूनलाजान् दिग्द्रव्यं च समानकम् ॥ 440

अन्यद्रव्याणि सर्वाणि न्यूनंवाप्यधिकं कुरु ।
यथा संभव मानेन होमयेद्देशिकोत्तमः ॥ 441

கிழக்கு முதலிய திக்குகளிலும், தென்கிழக்கு முதலிய விதிக்கு களிலும் விளங்கும் குண்டங்களில் சமித்து நெய், சரு, பொரி அந்தந்த திக்குகளுக்குக் கூறப்படும் விசேஷத்திரவியங்கள் யாவும் அததற்குரிய மந்திரங்கள்கூறி சம அளவாக ஹோமம் செய்யவேண்டும், மற்றத் திரவியங்கள் அதிகமாகவோ குறை வாகவோ கிடைத்த அளவில் ஹோமம் செய்யலாம்.

ईशेन यव धान्यं च मूलेन राजमाषकम् ।
शिखया श्मामकं हुत्वा प्रियङ्गुं च कुलुद्धकम् ॥ 442

अघोरेणतु पञ्चान्न मपूपं शिरसा हुनेत् ।
नेत्रेण पायसं चैवदुग्धमीशेन होमयेत् ॥ 443

யவதான்யத்தை ஈசான மந்திரத்தினுலும், மொச்சையை மூலமந்திரத்தினுலும், சாமை, தினை, கொள்ளு இவைகளை சிரோ மந்திரத்தாலும், ஐந்துவகை அன்னங்களை அகோர மந்திரத் தாலும், வடையை சிரோமந்திரத்தாலும், பாயசத்தை நேத்திர மந்திரத்தாலும் பாலை ஈசானமந்திரத்தாலும் ஹோமம் செய்ய வேண்டும் (பஞ்சான்னம் என்பது வெண்பொங்கல், சக்கரைப் பொங்கல், எள்ளன்னம், தயிரன்னம், பாயசான்னம் என்பன.)

[ தொடரும் ]

# பொறுமையின் பிறப்பிடம்

வித்துவான். திருமதி. ப. நீலா

'சிறியோர் செய்த சிறுபிழை எல்லாம் பெரியோராயின் பொறுப்பது கடனே' என்ற பழமொழி யாவரும் அறிந்த தொன்று. சிறியோர் செய்த சிறுபிழையே யல்லாமல் பெரியோர் செய்த பெரும்பிழையையும் பொறுத்துக் கொண்டான் உண்மை யிலேயே பெரியவனுன இராமன் என்ருல் பொறுமை பெருமை பெறுவது இராமனிடத்துத்தான் என்பதை நான் உணர்த்தியா உணரப் போகிறீர்கள். அது வெள்ளிடை மலையென விளங்கி நிற்கும் உண்மையாயிற்றே!

அரசாட்சியைப் பொறுத்து இரண்டுபேர் நிலையும் ஆய்வது அவசியம். தனக்குரிய அரசை மனம் ஒப்பி - அரசமா மண்ட பத்தில் பலர் காணச் சூதாடித் தோற்ருன் தருமன்.

"உரியவம்புவி யுதிட்டிரன்தனை யவனுற்றவர் பலர்காணப்
பரியவன் பெருஞ்சூதினுல் வென்றுபல் லாண்டடிப்பட
ஆண்டான்"

என்று பலராமனும் கூறுகிருன். தோற்றவர்கள் வெற்றிகொண்ட வர்கள் இடும் கட்டளைகளை நிறைவேற்றத்தானே வேண்டும். வெகுளியினுல் அங்கு என்ன சாதிக்கமுடியும்? வஞ்சகத்தால் துரியோதனன் தருமன் நாட்டைக் கவரவில்லை. சூதாடி வென் ருன். இந்த இடத்தில் பொறுமையாக இருப்பதைத் தவிர தருமருக்கு வேறு வழியில்லை.

இராமாயணக்காட்சி இதற்கு நேர்மாருனது. தசரதன் இராமனை அழைத்துவரச் சொல்லி, ஆரத் தழுவி அமைச்சர் களுடன் ஆலோசித்து மூத்த புதல்வன் என்பதாலும், மக்கள் உண்ணும் நீரினும், உயிரினும் அவனையே உவக்கின்ற செய்தி அறிந்த காரணத்தாலும், முடிக்குரியவன் இவனே என்று நிச்ச யித்து உவணக் குறியிட்ட ஓலையும் போக்கினுன்.

அமைச்சர்களும் மற்றவர்களும்

> " ஊருணிநிறையவும் உதவுமாடுயர்
> பார்கெழுபயன்மரம் பழுத்தற்றாகவும்
> கார்மழை பொழியவும் கழனிவாய்நதி
> வார்புனல் பெருகவும் "

மறுப்பவர்கள் உண்டோ என்று மனம் மகிழ்ந்திருந்தார்கள்.

அந்த வேளையில் தூமகேதுபோல் தோன்றிய தீய மந்தரை-கைகேகியின் தூய சிந்தையைத் திரித்தாள். தசரதன் கைகேயி கேட்ட வரத்தினை மறுக்கமாட்டாமல் மனம் நொந்து ஈந்தான்-'என் சேய் வனமாள, நான் போய் வானுலகாள, உன் மகனோடும் நீ துயரக் கடலிலே விழு' என்று புகன்றான்.

கைகேயி, தான் கேட்ட வரங்களைப் பெற்றுக்கொண்டவுடன் இராமனை அழைத்துவரச் சொல்லி அரசரின் சார்பில் தானே அவனோடுரைசெய்தாள். இந்த இடத்தில் கொதித்தெழ வேண்டிய கொண்டல்வண்ணன், குளிர்ந்த நோக்கோடு, அன்பை அகத் தடக்கி 'எந்தையே ஏவ நீரே உரை செய இயைவதுண்டேல் அடியனேன் உய்ந்தேன்' என்றுகூறி மின்னொளிர் கானம் செல்ல அன்றே விடையும் கொண்டான். செல்லிடத்திலே சினம் காப்பதல்லவா சிறப்பு. இங்கே பொறுமைக்குக் காட்டான இராமரின் மன நிலையை நமக்கு விளங்கக் காட்டுகிறார் கம்பர். இருளுடை உலகம் தாங்கும் இன்னலுக்குத் தந்தை ஏவலால் இயைந்து நின்ற இராமனை அருளுடைய கைகேயி அப்பிணிப்பி லிருந்தும் அவிழ்த்துவிட்டாள். உருளும் சகடத்தில் பூட்டப் பட்ட காளைகளை அவிழ்த்துவிடின் அவை எப்படி ஆனந்த மடையுமோ அப்படி இருந்தான் இராமன். தனக்கே உரிய அரசைக் கபடத்தால் தன் மகனுக்காக்கிய கைகேயிடம் அவன் குறைகாணவில்லை, மாறாக குணக்குன்றான இராமன் அரசாட்சி யை இளையவனான பரதனிடம் கொடுக்கச் சம்மதித்து பூழிவெம் கானம் நண்ணிப் புண்ணியப் புனல்களாடப் போகிறான்.

அரசுக்குரியவனை விலக்கிவிட்டு அருகதையில்லாத பரத னுக்குப் பட்டம் கொடுத்த தந்தையிடமும், கைகேகியிடமும் அளவிலா கோபம் கொண்டான் இலக்குவன். பொங்கி எழும் பிரளயத் தீயை அவிக்கவரும் மேகமன்ன தோற்றம் கொண்டு வந்தான் இராமன். மின்னொத்த சீற்றக் கனல்விட்டு விளங்க

நின்ற பொன்னொத்த மேனிப் புயலொத்த தடக்கையானைத் தன் இன்சொலால் ஆற்றுவிக்கும் இராமரின் பொறுமைக் குணம் ஈண்டு சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது.

"நதியின் பிழையன்று நறும்புனலின்மை யற்றே
பதியின் பிழையன்று பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழையன்று மகன்பிழை யன்றுமைந்த
விதியின் பிழைநீ யிதற்கென்னை வெகுண்ட தென்றான்."

எனை நாளும் பேணிவளர்த்த தந்தை சொல் கடந்து எற்கு அரசாள்வது என்று அமைதியாகச் சொல்லும் இராமரின் பண்புக்கு வேறெவரின் பண்பும் ஈடாகாது.

நாடிழந்த தருமர் பதிமூன்று ஆண்டுகாலம் காட்டில் வசித்த பின் கண்ணனை அனுப்பி ஐந்து நிலமோ, ஐந்துவீடோ கேள் என்றும் அவை மறுத்தால் அடுபோர் வேண்டு என்று துரியோதனனிடம் தூது அனுப்புகிறார்.

தாயுரைகொண்டு தாதை உதவிய தரணியை தீவினை என்ன நீத்துவந்து, நீயே அரசை மீண்டும் ஏற்று நடத்தவேண்டும் என்று வந்த எழிலுடைத் தம்பி பரதனிடம் சற்றும் கோபப் படாமல் அன்புமொழி புகலும் பாங்கு எண்ணுதற்கு இன்பம் தருவதொன்று. கோபாவேசம் கொண்டு குதித்த இலக்குவனையும் சமாதானம் செய்து பரதனை 'சேனுயர் தருமத்தின் தேவு என்றும், செம்மையின் ஆணி என்றும் புகழ்ந்தான் இராமன். பொறுமைக்கு இடம் கொடுத்த புண்ணியமூர்த்தி இவரன்றி வேறு யார் உண்டு!

மாற்றான் மனைவியைக் கவர்ந்த இராவணனின் குற்றம் அங்கை நெல்லியென விளங்கியபோதும் அறம் பிழையா அண்ணல் முறைப்படி தூதனுப்பியே போர் தொடங்கினான். போர்க்களத்தில் வாரணம் பொருத மார்பும் வரையினை எடுத்த தோளும், தாரணிமௌலி பத்தும், சங்கரன் கொடுத்த வாளும், வீரமும் களத்தே போட்டு வெறுங்கையுடன் இருந்த தன் பகைவனை நோக்கி, வாளைதாவுறும் கோசல நாடுடை வள்ளல், 'இன்றுபோய் நாளை வா' என்று இயம்பினனே. இதனை எந்த வார்த்தையால் வருணிப்பது! அவனின் மேலான பொறுமைக்கு வேறு என்ன காட்டுவது! பகையணியில் இருந்தாலும் உற

வுடைய ஒருவரை சற்று ஓய்வெடுத்துப் பின் போருக்குத் தயாராகச் சொன்ன தருமரின் பண்பை இங்கு எப்படி இணைத்துச் சொல்வது. பகையணியில் இருந்தாலும் உறவை உள்ளம் மறக்குமா ! அம்முறையில் தருமர் கண்ணோடியதாகக் கூறலாமே !

முன்பின் அறியாத பகைவன், அதிலும் தன் மனைவியைத் தானில்லாத நேரம் பார்த்து வஞ்சகத்தால் சிறைப்பிடித்தவன். முறையாக அனுப்பிய தூதனை அவமதித்து அநீதி இழைத்தவன், நீதிநெறியற்ற அந்த இராவணனிடம் கண்ணோட்டம் கொண்ட இராமரே பொறுமையின் பிறப்பிடம் என்று உறுதியாகச் சொல்லலாம்.



## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

Sri Sivalogathiagarajaswami Devasthanam, Achalpuram.

திரு ஆச்சாள்புரம், ஸ்ரீ சிவலோகத்தியாகராசர் ஆலயத்திற்கு 15—8—64 அன்று வழிபாடு காரணமாக யாங்கள் 60 அன்பர்கள் வந்தஞான்று யாங்கள் பெற்ற மகிழ்விற்கு அளவேயில்லை. ஆலயம் மிக்கத் தூய்மையில் வைக்கப்பெற்றிருந்தது. எங்கள் வழிபாட்டை அவ்வாலய நிருவாகஸ்தர், சிவாச்சாரியார், அனைவரும் உடனிருந்து சிறப்பாக நிகழ்த்திவைத்தனர். ஆலயத்தில் உள்ள எல்லாத் திருவுருவங்களையும், மிக அழகாக அலங்காரம் செய்துவைத்திருந்தது கண்களுக்குச் சிறந்த விருந்தாக இருந்தது.

(Sd.) செ. சுந்தரன்,
செயலன்,
புரசைத் திருநெறிக்கழகம், சென்னை-7.

இன்று காலையில் ஆலய வழிபாட்டுக்குச் சென்றேன், சுற்றுப்புறத் தூய்மையும் மற்றும் ஏற்பாடும், தருமையாதினத் திற்கேயுரிய உயர்ந்த பாணியில் இருந்தது மிகவும் மகிழ்ச்சியையும் பெருமையையும் தருகின்றன.

8—10—64.

(Sd.) S. Arumugam,
Revenue Divisional Officer,
Mayuram.

# தமிழ் கூறு நல்லுலகம்

திரு. அ. கலியபெருமாள், எம். ஏ.,

( மலர் 23, இதழ் 11, பக்கம் 654 இன் தொடர்ச்சி )

கழனிகளில் மூங்கில்போல் கதிர்நெல் வளர்ந்திருப்பதைப் பதிற்றுப் பத்தில் பார்க்கிறோம்.

> " முடந்தை நெல்லின் கழையமல் கழனிப்
> பிழையா விளையுள் " (பதிற்று. 32)

களிற்றை மறைக்கும் அளவிற்குக் கதிர்கள் மூங்கில்போல் வளர்ந்தால் விளையும் நெல்லும் வேலிக்கு ஆயிரக் கலமாகத் தானே இருக்கும்!

கூட்டில் மொய்த்துக் கிடக்கும் குளவிகளுக்கு உவமை சொல்ல முற்படுகிறார், அரிசில்கிழார். அவருக்குத் தான்கண்ட ஒரு காட்சி நினைவிற்கு வருகிறது. நீங்காத புது வருவாயை உடைய நிலங்களிலிருந்து மகளிர் நெற்கதிர்களை அரிந்து களத்தில் சேர்க்கின்றனர். மகளிர் மலிந்த அக்களத்தில் எருதுகள் மிதித்து உதிர்ந்த நெல் மலைபோல் குவிந்து கிடக்கிறது. அக் குவியலில் அளப்பதற்காக எண்ணற்ற மரக்கால்கள் பொதிந்து வைக்கப்பட்டிருக்கின்றன. குவியலில் மரக்கால்கள் பொதிந்து வைக்கப்பட்டிருக்கும் காட்சிதான் கூறுதமிழ்ப் பாவலர்க்கு உவமையாகிறது. இதோ உவமை:

> " அருஅ யாணர் அகன்கண் செறுவின்
> அருவி ஆம்பல் நெய்தலொ டரிந்து
> செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
> பருஉப் பகடுதிர்த்த மென்செந்நெல்லின்
> அம்பண அளவை உறைகுவித் தாங்கு " (பதிற்று 71)

செந்நெல் வளர்ந்தது போன்றே கரும்பும் செழித்து வளர்ந்தது. " கன்னலே கமுகுகாட்ட " என்று பின் வந்தோர்

பாடியதற்கு முன்னிருந்த ஆதாரமாகக் கரும்புகள் திகழ்ந்தன. கன்னல் வளரும் இடந்தோறும் கரும்பாலைகள் ஒலிசெய்தன. காலமன்றியும் கரும்பறுத்தலால், இடையறுது எப்போதும் அவ்வாலைகள் இயங்கிக் கொண்டிருந்தன. கரும்பாலையைப் பற்றிக் கவிஞர் பலர் தம் பாடல்களில் குறித்துள்ளனர்.

கரும்பாலை இயங்கிக் கொண்டிருக்கிறது. அதிலிருந்து எழும்புகை அடுதலால் அயலுள்ள வயல்பூத்த நெய்தல் வாடுகிறது, கடியலூர் உருத்திரங்கண்ணனுர் கவிதை இதோ

" கார்க் கரும்பின் கமழாலைத்
தீத்தெறுவில் கவின்வாடி
நீர்ச்செறுவில் நீள்நெய்தல்
பூச்சாம்பும் " (பட்டினப்பாலை 9-12)

கரும்பினைப் பிழியும் எந்திரம் பேரொலி எழுப்புகிறது. அவ்வொலிகேட்டு அயலே உள்ள வாளைமீன்கள் அஞ்சிப் பிறழ்கின்றன.

" கரும்பின் எந்திரம் சிலைப்பின் அயலது
இருஞ்சுவல் வாளை பிறழும் " (புறம் - 322)

என்பது ஆவூர்க்கிழாரின் சொல்லோவியம்.

தேனூர் மருதவளம் சிறந்த ஊர்; கரும்பும் கமழாலைகளும் அங்கே உண்டு. கரும்பின் எந்திரம் எழுப்பும் பேரொலிக்குக் களிற்றின் பிளிறல்கூட ஈடாகாது. இதனை ஓரம்போகியார்,

" கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும்
தேர்வண் கோமான் தேனூர் " (ஐங்குறு. 55)

என்று கூறுகிறுர். கன்னலும் செந்நெலும் அன்றிக் காய்க் கமுகும் கமழ் மஞ்சளும், கொழுமடல் வாழையும் குலைத்தெங்கும், மாவும், பெண்ணையும், சேம்பும் இஞ்சியும் பயன் தந்தன.

" கோட்டெங்கின் குலைவாழைக்
காய்க்கமுகிற் கமழ்மஞ்சள்
இனமாவின் இணர்ப்பெண்ணை
முதற்சேம்பின் முளைஇஞ்சி " (பட்டினப்பாலை. 16-19)

என்பனபோன்ற புன்செய்ப் பயிர்களும் ஏராளமாக விளைந்தன. முற்றிய எள்ளுக்காய்களின் பருமன் சொல்லி முடியாது. ஒரு பிடியுள் ஏழுகாய்களே அடங்கும். எள்ளினுள்ளே நெய் நிறைந்த அளவு இருக்கும்.

"கௌவை போகிய கருங்காய் பிடியேழ்
நெய்கொள ஒழுகின பல்கவர் ஈரெண்"

(மலைபடு. 105-106)

முகிலேறி இளைக்கும் குன்றுபடு பொருள்களின் பெருமையை முட்டாச் சிறப்பின் பட்டினத்து அங்காடி வீதியும் முழங்கு, தமிழ்க்கூடலின் பீடிகைத்தெருவும் எடுத்துரைக்கும். அகிலும் ஆரமும், தினையும் தேனும், கறியும் கனிந்த பலாவும் இன்னும் பலவும் தமிழகத்து மலைகளின் அளப்பரிய செல்வங்கள்.

ஆரவாரம் செய்தவாறு அருவி பாய்ந்து வருகிறது. குன்றின் அகலிடமெங்கும் நின்று வரவேற்கும் மூங்கில்கள். ஒருசார் மிளகுக் கொடிகள் வளர்ந்து மண்டிக்கிடக்கின்றன. வெற்றிட மின்றித் தினைகள் முற்றிக் கிடக்கின்றன. முற்றிய தினையை அறுத்துக் கொணர்ந்த குறவர் உண்ண முற்படுகின்றனர். மான் இறைச்சி புழுக்கிய பானையில் மரையாவின் நுரையார்ந்த இன்தீம் பாலைப் பெய்கின்றனர். ஆம், அதுதான் உலைநீர், அடுதற்கு விறகு வேண்டாவா? ஆரம் இருக்கவே இருக்கிறது! உணவு தயாராகிவிட்டது. எல்லோரும் மலைமல்லிகை மணக்கும் எழில் முற்றத்தே கூடி அகன்ற வாழை இலையிலே பகுத்துண்டு களிக்கின்றனர். பிட்டங்கொற்றனின் குதிரை மலை வளத்தை இவ்வாறு படம் பிடித்துக் காட்டுகிறார், கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார்.

"நன்னாள் வருபதம் நோக்கிக் குறவர்
உழாஅது வித்திய பரூஉக்குரல் சிறுதினை
முந்து விளையாணர் நாள்புதி துண்மார்
மரையான் கறந்த நுரைகொள் தீம்பால்
மான்தடி புழுக்கிய புலவுநாறுகுழிசி
வான்கேழ் இரும்புடை கழாஅது ஏற்றிச்

சாந்த விறகின் னுவித்த புன்கம்
கூதளங் கவினிய குளவி முன்றில்
செழுங்கோள் வாழை அகலிலைப் பகுக்கும்
ஊராக் குதிரை'' (புறம் 168)

"உழவின்றேல் உண்டியில்லை; உலகில்லை" என்ற கருத்தை எவர் ஒப்புக்கொண்டாலும், பாரிவேளின் பறம்புவாழ்மக்கள் மட்டும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். காரணம், உழவின்றியே உண்டி கிடைக்கும் வளம் பெற்றவர்கள் அவர்கள். உண்டிட, உழாமலே விளையும் மூங்கில் நெல் உண்டு; கொழுவிய வள்ளிக் கிழங்கு உண்டு; இனிக்கும் பலாக்கனி உண்டு; இணைத்துச் சுவைக்க நறுந்தேன் உண்டு. இத்தகுவளமுடைய பறம்பினைக் கபிலர் "உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே" என்று குறிக்கிறார்.

"உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளையும்மே
இரண்டே, தீஞ்சுளைப்பலவின் பழம் வீழ்க்கும்மே
மூன்றே கொடுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே
நான்கே, அணிநிற ஓரிபாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றம் தேன் சொரியும்மே"

(புறம். 109)

பறம்பு மலையில் வளரும் மரங்கள், "இக்காலத்தில்தான் பயன் கொடுக்கும்" என்ற வரையறைக்கு உட்பட்டவை அல்ல. எக்காலத்தும் அவை மாறாது பலன் தருதலால் கபிலர், "காலமன்றியும் மரம்பயம் பகரும்" என்று கூறுகிறார். பறம்புமலை மரங்களின் இத்தகு வளமையைக் காணும்போது நமக்கு நன்னன் நாட்டு வளம் நினைவிற்கு வருகிறது. அவன் நாட்டு மரங்களும் எக்காலத்தும் பயன் தருகின்றனவாம்.

"காலமன்றியும் மரம் பயன் கொடுத்தலின்"

(மலைபடுகடாம் 134)

[தொடரும்]

# சித்தாந்த வினாவிடை

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி,
மகாவித்துவான்.
திரு. சி. அருணைவடிவேலு முதலியார்.

( மலர் 23, இதழ் 11, பக்கம் 650 இன் தொடர்ச்சி )

## மூவகைத் திருமேனிகள்

மாணுக்கன் : இறைவனுக்கு அவனது உண்மை நிலையில் உருவம், தொழில், பெயர் ஒன்றும் இல்லையாயினும், உயிர்களின் பொருட்டு அவன் அடையும் பொதுநிலையில் அவை அனைத்தும் அவனுக்கு உள்ளன எனவும், அவையெல்லாம் அருள் காரணமாக அமைந்தனவே யன்றி, மாயையினுல் ஆகியவை அல்ல எனவும் உணர்ந்தேன்; ஆயினும், அவ்வுருவங்கள் எவ்வெக் காரணத்தால் எவ்வாறு அமையும் என்று அறிகிலேன்; அதனை அறிவித்தருளல் வேண்டும்.

ஆசிரியர் : 'வடிவம்' என்பன யாவும். 'அருவம். உருவம், அருவுருவம்' என்னும் மூன்று வகையினுள் அடங்கும். 'அருவம்' என்பது காட்சியளவையால் அறியப்படாது, கருதலளவையால் அளவிட்டு அறியப்படுவது. உருவம், காட்சியால் அறியப்படுவது. அருவுருவம் ஒருகால் காட்சியால் அறியப் பட்டும், ஒருகால் காட்சியால் அறியப்படாமலும் இருப்பது. ஆகாயம் முதலியன அருவப் பொருள்கள். நீர், நிலம் முதலியன உருவப் பொருள்கள். தீ முதலியவை அருவுருவப் பொருள்கள். காற்று, கண்ணுக்குப் புலனுகாவிடினும், உடம்பிற்கு வன்மையாகவும், மென்மையாகவும் புலனுதலின் உருவமுடையதே. எனினும், கண்ணுக்குப் புலனுகாமைபற்றி அதனை, 'அருவம்' என்றும் கூறுவர்.

மாணுக்கன் : இறைவன் கொள்ளும் வடிவம், அருவமோ? உருவமோ? அருவுருவமோ?

ஆசிரியர் : தமக்கென வடிவம் உடைய பொருள்களே, மூவகையுள் யாதேனும் ஒரு வடிவத்தையுடையனவாய் இருக்கும். இறைவன் தன்பொருட்டு யாதொரு வடிவத்தையும் வேண்டாத

வன் : பிறர் பொருட்டே வடிவத்தைக் கொள்பவன் ; ஆதலின், அவன் மூவகைத் திருமேனிகளையும் உடையவனுவன்.

மாணுக்கன் : இறைவன் மூவகைத் திருமேனிகளை எவ்வாற்ருல், எவற்றின் பொருட்டுக் கொள்வன் ?

ஆசிரியர் ; இறைவன் உலகத்தை நோக்காது தன்னியல்பில் நிற்கும்பொழுது, 'சிவன்' என்று சொல்லப்படுவன். இதுவே 'சொரூப நிலை' எனப்படும் அவனது உண்மை நிலை. இந் நிலையில் உள்ள பொழுதுதான் இறைவனை, 'பரம சிவன், சொரூப சிவன், சுத்த சிவன்' என்றெல்லாங் கூறுவர். இந்நிலையில் அவனது சத்தியை, 'பராசத்தி' என்பர்.

இந்நிலையின் நின்றும் நீங்கி, இறைவன் உலகத்தை நோக்குங்காலத்தில், 'சத்தி' என்று அழைக்கப்படுவான். வானத்தில் உள்ள சூரியன், மண்ணில் வியாபிப்பது, தனது ஒளிக்கதிர்களினுலேயாம். அதுபோலவே, மிகவும் மேலிடத்துள்ளோனுகிய இறைவன் தனக்குக் கீழேயுள்ள உலகத்தில் வியாபிப்பது அவனது சத்தியினுலேயாம். அது பற்றித்தான் இந்த நிலையை, 'சத்தி' என்றே கூறுகின்றனர்.

மாணுக்கன் : சூரியனுடைய ஒளிக்கதிர்கள் அனேக வகையாய் உள்ளன ; அதுபோல இறைவனது சத்தியும் அநேகமோ ?

ஆசிரியர் ; அவ்வாறன்று ; ஒரு சத்தியே செயலால், பல வகையாகப் புலப்படும். நெருப்பிற்கு உள்ள சத்தி ஒன்றே : அஃது ஒன்றைச் சுடும்பொழுது, 'சுடும் சத்தி' என்றும், பாகம் பண்ணும் பொழுது, 'பாகம் பண்ணும் சத்தி' என்றும், இருளை நீக்கிப் பொருளை விளக்கும்பொழுது, 'விளக்கும் சத்தி' என்றும் சொல்லப்படும். அதுபோலத்தான், இறைவனது ஒரு சத்தியே பல பெயர்களைப் பெற்று நிற்கும்.

மாணுக்கன் : அவ்வகைக் காரியங்களும், அதனுல் அச்சத்தி பெறும் பெயர்களும் யாவை ?

ஆசிரியர் : இறைவனது மேலான நிலையில் பராசத்தி என்று சொல்லப்பட்ட அந்த ஒரு சத்தி, அவன் உலகத்தை நோக்கத் தொடங்குகையில், 'ஆதி சத்தி' என்று பெயர்பெறும்; ஏனெனில் உலகத்தை இயக்கும் எல்லாச் சத்திகட்கும் இதுவே முதல்-மூலம். இந்தச் சத்தி உயிர்களுக்கு இறைவனைக் காட்டாமல்,

உலகத்தையே காட்டி, அவைகளைப் பிறப்பிறப்பில் அகப்பட்டு உழலச் செய்வதால், 'திரோதான சத்தி' என்றும் பெயர் சொல்லப்படும். திரோதானம் - மறைப்பது. இறைவன் உலகத்தை இயக்குதற்கு அவனது பேராற்றலுள், ஒரு சிறிதே போதுமாகலின், பராசத்தியின் ஒரு சிறுகூறே ஆதி சத்தி அல்லது திரோதன சத்தியாய் நிற்கும் என்க. இதனை, 'பரா சத்தியின் ஆயிரத்தொரு கூறு ஆதி சத்தி' என்று கூறுதல் மரபு.

இனி, உலகத்தை நோக்கத் தொடங்கிய இறைவன், முதலில் அதனையறிந்து, அதனை உய்விக்கச் செய்தலை விரும்பி, விரும்பிய வண்ணமே பல செயல்களையும் செய்வன். ஆகவே, அவனது சத்தி ஒன்றே, அறியும் ஆற்றல், விழையும் ஆற்றல், செய்யும் ஆற்றல்' என வேறு வேறு வகையாய்ப் புலப்படும். அவை முறையே, 'ஞானசத்தி, இச்சா சத்தி, கிரியா சத்தி' எனப் பெயர்பெறும். எனவே, சத்திகள் எண்ணற்றனவாகச்சொல்லப் படினும், 'பராசத்தி, ஆதிசத்தி, ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி' என்னும் ஐந்து சத்திகளே முதன்மையானவையாம்,

" ஒன்றதாய் இச்சா ஞானக் கிரியையென் றொருமூன் றாகி
நின்றிடும் சத்தி ; இச்சை உயிர்க்கருள் நேச மாகும்
நன்றெலாம் ஞான சத்தி யால்நயந் தருள்வான் நாதன்
அன்றருட் கிரியை தன்னால் ஆக்குவன் அகில மெல்லாம் "

என்பது சிவஞானசித்தி (சூ. 1-63)

இறைவன், 'மாயையினின்றும் பிறர், உடம்பைப் படைத்துக் கொடுக்க, அவற்றைத்தான் பெறுபவன் அல்லன்; தானே தனது இச்சையின் வண்ணம் தனது சத்தியால் பலவகைத் திருமேனி களைக்கொள்வன்' என்று முன்பு கூறினோம் அன்றோ? அங்ஙனம் கொள்ளுங்கால், ஆதி சத்தி முதலிய சத்திகளாலேதான் திரு மேனிகளைக் கொள்வன் என்க.

மாணாக்கன் : அத்திருமேனிகள் மூவகையாய் எங்ஙனம் அமைகின்றன ?

ஆசிரியர் : உலகத்தை நோக்கத் தொடங்கிய நிலையில், 'தடத்த சிவன்' என்று பெயர்பெற்ற இறைவன், அதனைச்செயற் படுத்துதலைக்கருதத் தொடங்கும் நிலையில் 'சத்தி' எனப்பெயர் பெற்று நின்று, முதலில் அறிவாற்றலாகிய ஞானசத்தி மாத்திரத் திரத்தால் உலகத்தைப் பொதுவாக நோக்குவன். அந்நிலையில் அவன், 'நாதம்' என்று அழைக்கப்பெறுவன். அதன்பின், செயலாற்றலாகிய கிரியாசத்தியால் செயற்பாடுகளை யெல்லாம்

பொதுவாகக் கருதுவன். அந்நிலையில், 'விந்து' என்று அழைக்கப்படுவன். 'சிவன், சத்தி, நாதம், விந்து' என்னும் இந்நான்கு நிலையிலும் இறைவன் அளவுபட்டு நிற்கும் நிலை அருவமே யாதலின், இவைகளே அருவத்திருமேனிகளாம். இவைகளில், 'சத்தி, விந்து' என்னும் இரண்டும் உண்மையில் சத்தியின் பகுதிகளே.

பொதுவாக நோக்கியும், பொதுவாகக் கருதியும் நின்ற இறைவன், ஞான சத்தியால் சிறப்பாக நோக்குதலும், கிரியா சத்தியால் சிறப்பாகக் கருதுதலும் உண்டு. அந்நிலையில் அவன், 'சதாசிவன்' என்று அழைக்கப்படுவன். அப்பொழுது அவனது சத்தி, 'மனோன்மனி' என்று சொல்லப்படுவாள். இந்நிலை செயலிற்புகும் நிலையே யல்லது செயல் ஆற்றும் நிலையன்று. அதனால், முன்பு பொதுவாய் நின்ற அருவமும் ஆகாமல் பின்பு சிறப்பாய்வரும் உருவமும் ஆகாமல் அருவுருவத் திருமேனியாய் அமையும் இவ்வடிவமே ஒளிப்பிழம்பான சிவலிங்கத்திருமேனி யாகும்.

சிறப்பாக நோக்கியும், சிறப்பாகக்கருதியும் நின்ற இறைவன், நோக்குதல் சிறிதாக, கருதுதல் பெரிதாக நின்று எல்லாவற்றை யும் கருதியவண்ணமே செய்வன். இந்நிலையில், அவன் 'ஈசுரன்' அல்லது 'மகேசுரன்' என்று அழைக்கப்படுவான். அவனது சத்தியும், 'ஈசுவரி' அல்லது 'மகேசுவரி' என்று அழைக்கப் படுவாள். இறைவன் கொள்ளுகின்ற உருவத் திருமேனிகள் யாவும் இம்மகேசுர நிலையின் வேறுபாடுகளேயாகும். அவை, 'ஏகபாதர், அர்த்தநாரீசுரர், உமாசகாயர், சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், நடராசர்' முதலான மாகேசுர மூர்த்தங்கள் இருபத்தைந்தும், மற்றும் அடியார்களுக்கு ஆங்காங்குப் பற்பல வகையால் தோன்றி அருளிய வடிவங்களுமாகும். தேவர்கள் பொருட்டும், ஏனைய உலகத்தார் பொருட்டும் திரிபுரத்தை எரித்தது முதலியனவும், சனகாதி முனிவர்கட்குத் தக்ஷிண மூர்த்தியாய் இருந்து ஞானத்தை அருளியது முதலியனவும் எல்லாம் இம்மாகேசுர மூர்த்தமாதல் அறிந்துகொள்க.

இவ்வுருவத் திருமேனி, 'போக வடிவம், யோக வடிவம், வேக வடிவம்' என மூன்று வகைப்படும். போக வடிவம் உலக இன்பத்தைத் தருதற்பொருட்டு, மணக்கோலம் கொள்ளுதல் போன்றவை. யோக வடிவம் ஞானத்தைத் தருதற்பொருட்டுக் குருமூர்த்தியாய் எழுந்தருளியிருத்தல் போன்றவை. வேக வடிவம், உலகத்தார்க்கு உண்டாகும் துன்பத்தைப் போக்கப் போர்க்கோலம் கொள்ளுதல் போன்றவையாம், (தொடரும்)

# நடுவே நின்ற விலங்கு

செஞ்சொற்கொண்டல்

வித்துவான். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ.,

அப்பர் வாக்கு :

அப்பரடிகள் பாடியருளிய தனித்திருத்தாண்டகங்களுள் ஒன்று கீழ்வரும் பாடல் ஆகும் :

"குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலம்ஆய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானியல்லேன்
நல்லாரோடிசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கல்லேன் ; விலங்கல்லா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேசவல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈயமாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே"

(3023)

சிந்தனைப்பகுதி :

இத்திருப்பாட்டில், அடிகள் தம்முடைய பொல்லாமைகளை எடுத்துரைப்பார்போல உலகவர் கீழ்மைகளையெல்லாம் உரைத்துள்ளார் என்பது உய்த்துணரத்தக்கவொன்றாகும் ; இதனுள் குலம், குணம், குறி, நலம் முதலிய அனைத்துவகைகளிலும் கீழ்ப்பட்டு விலங்காகவும் விலங்கு அன்றாகவும் தாம் உள்ள வகையையும், இரப்பவர்க்கு ஈயமாட்டாத தறுகண்மை உடையோராய்த் தாம் விளங்கும் திறத்தையும் அடிகள் உருக்கமாக உரைத்தருள்கின்றார். இதனுள் வரும், "நடுவே நின்ற விலங்கு" என்ற தொடர் கற்போர் சிந்தை கவரும் ஒரு நிலை உடையதாகும். 'விலங்கு' என்று அடைமொழியின்றி உரைத்தாலும் போதுமே ; 'நடுவே நின்ற' என்ற இரு சொற்கள் அடையடுத்த கருத்து யாது? நடுவாவது யாது? அதனுள் நிற்றல் என்றால்

என்ன? அது விலங்குகட்கு எவ்வாறு பொருந்தும்? என்பன முதலிய வினக்களுக்கு இடம் தருவதாய் உள்ளது 'நடுவே நின்ற விலங்கு' எனும் தொடர். ஆனல் அத்தொடர் அடி களுடைய நுண்மாண் நுழைபுலத்தை எடுத்துரைக்கும் இனி மையும், கருத்துச் செறிவும், சொற்குறுதிச் சிறப்பும் உடைய தாதலே இங்குச் சிந்திப்போம். *

தோல்காப்பியர் பாகுபாடு :

உயிர்களை ஆறறிவுவரை பகுத்திருக்கின்ருர்கள் நம் பழந்தமிழ் முன்னேர். புல்லும் மரமும் ஓர் அறிவின என்றும், நந்தும் முரளும் ஈரறிவின என்றும், சிதலும் எறும்பும் மூவறிவின என்றும், நண்டும் தும்பியும் நான்கறிவின என்றும், ஒருசார் விலங்கும், அவைபோல் சில மானிடங்களும் ஐயறிவின என்றும் ஆசிரியர் தொல்காப்பியர் அருளியுள்ளார். ஐம் பொறி உணர்வுடன் மனமென்பதோர் அறிவும் உடையார் மக்கள் என்றும், அக்கிளைப்பிறப்பு வேறும் சில உள என்றும் பொருள் பட,

> "மக்கள் தாமே ஆறறிவுயிரே
> பிறவும் உளவே அக்கிளைப்பிறப்பே"
>
> (பொருள் - 588)

எனத் தொல்காப்பியர் இயம்பியுள்ளனர்.

பேராசிரியர் பேருரை :

இச்சூத்திரத்திற்கு உரையெழுதப் புகுந்த பேராசிரியர் முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறிவொடு புணர்ந்த ஆடூஉ மக்கள் எனப்படும். அவ்வாறு உணர்விலும் குறைவுபட்டாரைக் குறைந்தவகை அறிந்து முற்கூறிய சூத்திரங் களானே அவ்வப் பிறப்பினுட் சேர்த்திக் கொள்ள வைத்தான் என்பது; அவை ஊமும், செவிடும், குருடும் போல்வன. 'கிளை' யெனப்படுவார் தேவரும் தானவரும் முதலாயினர், 'பிறப்'

---

* தருமையாதீனம் - ஆருந்திருமுறை - முதுபெரும்புலவர். திரு. சி. அருணேவடிவேலு முதலியார் அவர்கள் உரைப்பகுதி இதற்கு மிக அழகாக அமைந்துள்ளது. (பக். 705)

பென்றதனல் குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன எனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராயடங்கும் என்பது 'தாமே' எனப்பிரித்துக் கூறின மையான் நல்லறிவுடையார் என்றற்குச் சிறந்தார் என்பதும் கொள்க" என்று எழுதினர். குரங்கு முதலாகிய சில விலங்குகள் விலங்குகளுள்ளும் வேறுபட்டு நிற்பதுடன் ஆறறிவும் பெற்றிருக்கும் என்பதும், அவற்றை முழுதும் ஐயறிவுயிர் - இனத்துள்ளும், அன்றி ஆறறிவுயிர் - இனத்துள்ளும் சேர்த்தல் இயலாது என்றும் பேராசிரியர் உரையினின்றும் அறியலாம்.

இளம்பூரணர் கருத்துரை :

"மக்கள் தாமே" எனும் சூத்திரத்திற்கு அடுத்து, ஒரு சார் விலங்கும் உளவென மொழிப" என்ற சூத்திரத்தைப் பாடம் ஓதிய இளம்பூரணர், "விலங்கினுள் ஒருசாரனவும் ஆறறிவுயிராம் என்றவாறு" எனப் பொருள் எழுதி, "அவை யாவன கிளியும் குரங்கும் யானையும் முதலாயின" என விளக்கியுள்ளார். * இந்தச் சூத்திரம் ("ஒருசார் விலங்கும் உளவென மொழிப" என்பது) பேராசிரியர்க்குக் கிடைக்கவில்லை என்று தெரிகிறது; ஆதலின் இப்பொருளைப் 'பிறப்பு' என்ற இலேசினுன் அவர் கொள்ளக் காண்கின்ருேம். இப்பகுதிகளால் விலங்குகளுள் ஒருசாரன மனஉணர்வுடையன என்ற கருத்து இனிது விளங்கத் தக்கதாகும். மனஉணர்வுடைய மக்களுயிர்க்கும், மனவுணர்வில்லாத பிற உயிர்களுக்கும் இடையே நிற்கும் இத்தகு உயிரினங்களை 'நடுவே நின்ற விலங்கு' என்ற தொடர் விளக்குகின்றது எனக் கொள்ளுதல் பொருந்தும்.

அறிவியல் நுட்பம் :

விலங்கு நிலையிலிருந்து இன்று மனிதன் தன் நிலைக்கு வந்துள்ள பரிணும வளர்ச்சியைக் கணிக்கின்ற அறிவியலார், விலங்கு நிலைக்கும் மனிதநிலைக்கும் இடையே ஹோமோ சப்பியான் (Homo sapien) என்ற நிலையைக் குறிக்கின்றனர். ‡ பேசும்

* தொல். பொருளதிகாரம் - சூத். 577. 578.

‡ இதுபற்றிய விளக்கத்தை, Hockett எழுதிய 'A course in Modern Linguisties என்ற நூலின், 569 – 570 பக்கங்களிற் காணலாம்.

திறம் பெற்ற இதனை அப்பரடிகள் குறிக்கின்ற 'நடுவே நின்ற விலங்கு'க்கு ஒப்பிட்டுக் கூறலாம். இந் நுட்பங்கள் விளங்காத வழி, 'நடுவே நின்ற விலங்கு' என்ற இதன் ஆழப்பொருள் எல்லாம் அறிய இயலாதுபோகும்.

இத்தகு சிந்தனைகளை விளக்கின்ற புதுமைச் சிறப்புடைய தாய்த் திகழ்கின்றது இந்த நலமிகுதொடர். பேரறிவும், அநுபவச் செறிவும், திருவருள் வீறும் உடைய அருட்பெருந்தகையாராகிய அப்பரடிகள் வாக்கில் வரும் இந்தத் தொடரின் அரும்பொருள் நுட்பத்தை இன்றைய அறிவுலகம் காணுந்தோறும் களிப்படையும் என்பதற்கு ஐயம் இல்லை. காலம் வாய்க்கும் போதெல்லாம் இவையனைய தமிழ்நுட்பங்களைக் கண்டு பயன் கொள்ளல் கற்றறிந்த மாந்தர் கடன் ஆகும்.

---

EXRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

I had the good fortune of visiting this Temple with my family this morning. I am greatly impressed with the clean and neat way the whole place had been maintained by the Kattalai Vicharanai of this temple. The images are well decorated and the worship is carried out with religious fervour, seal and sincere enthusiasm. One feels holy and pure breathing the sacred atmosphere of this religious shrine. I hope some of the other temples and religious institutions in India would copy, adopt and follow the methods adopted in this temple. I am so happy that I am feeling strong inclination to visit once again.

(Sd.) Sanjivi Nayudu,
Judge, High Court of Assam & Nagaland.
1—10—1964.

இலங்கை வானொலியின் மதிப்புரைகள் :

# தருமபுர ஆதீனம் வெளியிட்ட ஆறாந் திருமுறை

தமிழிலக்கியப் பரப்பிலே பக்தி இலக்கியத்திற்குச் சிறப்பிடம் உண்டு. சைவர், வைணவர், சமணர், பௌத்தர், கிறித்தவர், இஸ்லாமியர் முதலிய பல சமயத்தினரும் இயற்றிய பக்தி இலக்கியங்கள் தமிழ்மொழியை வளஞ்செய்து நிற்கின்றன. சைவத் தமிழ் இலக்கியங்களுள்ளே தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்தவை சைவ நாயன்மார் இயற்றிய பக்திப் பாடல்கள். பன்னிரண்டு திருமுறைகளாக இவை வகுக்கப்பட்டுள்ளன. முதல் மூன்று திருமுறைகளும் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர் அருளிச் செய்தவை. திருநாவுக்கரசர் பாக்கள் நான்காம், ஐந்தாம், ஆறும் திருமுறைகள். ஏழாம் திருமுறை சுந்தர மூர்த்தி நாயனர் தேவாரம். மாணிக்கவாசகரின் திருவாசகம், திருக்கோவையார் எட்டாம் திருமுறை. ஒன்பதாம் திருமுறையிலே திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் இடம்பெறுகின்றன. திருமூலநாயனரின் திருமந்திரம் பத்தாம் திருமுறை. பல பக்தர்களால் பாடப்பட்ட நாற்பது பிரபந்தங்களைக் கொண்டுள்ளது பதினோராம் திருமுறை. சேக்கிழார் சுவாமிகளின் பெரியபுராணம் பன்னிரண்டாம் திருமுறை. இப் பன்னிரண்டு திருமுறைகளையும் யாவரும் பொருளுணர்ந்து ஓதும் பொருட்டு அவற்றை உரையுடன் வெளியிடவேண்டும் என்னும் நோக்கம் கொண்டு முதல் ஐந்து திருமுறைகளும் இதுகாறும் வெளியிட்டுவிட்டது தருமபுர ஆதீனம். இப்பொழுது ஆறும் திருமுறையை வெளியிட்டுள்ளது.

அப்பர் பாடல்களுள்ளே, நாலாந் திருமுறையில் கவிச்சுவை ததும்பும் பாடல்களும், ஐந்தாம் திருமுறையில் உபதேசம் நிரம்பிய பாடல்களும், ஆறும் திருமுறையில் பக்திப் பெருக்கம், இறைவன் தன்மை, அவன் அருளும் வகை முதலிய பொருள்கள் நிறைந்த பாடல்களும் காணப்படுகின்றன. 981 திருத்தாண்டகப் பாக்களைக் கொண்டு விளங்குகிறது ஆறும் திருமுறை. நாவுக்கரசர் என்று தமிழுலகம் பாராட்டி நிற்கும் அப்பருக்குத் தாண்டக வேந்தர் என்னும் சிறப்புப் பெயரும் உண்டு. தாண்டகம் என்னும் செய்யுள் வகையைக் கையாண்டு வெற்றி கண்டவர் நாவுக்கரசர். இடையருப் பேரன்பும் சிவபெருமான்

திருவடிக்கே பதித்த நெஞ்சும் கொண்டு விளங்கிய அப்பர் பெருமானின் திருவாயில் எழுந்த தீந்தமிழின் மாலைகளுள் மிகச் சிறந்தன அவரியற்றிய திருத்தாண்டகங்கள். தேவாரங்களுள் ளும் உணர்ச்சி ததும்பி நிற்பன திருத்தாண்டகங்கள். இறைவன் திருவடியின் பெருமையினைக் கூறிநிற்பன அப்பாக்களுட் சில. அவன் திருவுருவின் தன்மையை விளக்கி நிற்பன சில.

உயர்தர பரீட்சைகளுக்குத் தேவாரங்கள் பாடமாக உள்ள போது பல இடங்களில் பொருள் உணர முடியாமல் இருந்ததைப் பலர் அறிவோம். திருமுறைகளைக் கருத்துரையோடு வெளியிடும் தருமபுர ஆதீனம் அளவிடற்கரிய அருந்தொண்டாற்றுகிறது. ஆறும் திருமுறை, தருமையாதீனப்புலவர் திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்களின் குறிப்புரையோடு வெளியிடப் பட்டுள்ளது. பாட்டுக்களின் பொருளை நன்குணர்ந்துகொள் வதற்குப் பேருதவியாக அமைந்துள்ளது இவ்வுரை. பாட்டுக் களிற் காணப்படும் சொற்கள் யாவற்றிற்கும் கருத்துரை கூறியும், வேண்டுமிடங்களில் இலக்கண அமைதியை விளக்கியும், நயம் பொருந்திய பகுதிகளுக்குச் சிறப்புரை கூறியும், வேண்டிய இடங் களில் மேற்கோள் காட்டியும், சமயத் தொடர்புடைய இடங்களில் விரிவுரை கூறியும் பொருளை விளங்க வைக்கிறார் முதலியார். பொருள் புரிய முடியாமல் இடர்ப்பட வைக்கும் செய்யுட்களாகிய 'பிரியாத குணமுயிர்கட்கஞ் சோடஞ்சாய்', 'புகையெட்டும் போக் கெட்டும் புலன்களெட்டும்' என்பனவற்றிற்குக் கூடத் தம் புலமை யினால் பொருள் சிறக்க விளக்கம் கூறுகிறார். ஒவ்வொரு பதிகத் தொடக்கத்திலும் பதிக வரலாறு தெளிவாக எடுத்துரைக்கப் பட்டுள்ளது. பதிக முடிவில் தொடர்புடைய சேக்கிழார் சுவாமி களின் பெரிய புராணச் செய்யுட்கள் இடம் பெறுகின்றன. அப்பர் வாழ்க்கையை விளக்கிப் பதிகம் பாடிய சந்தர்ப்பங்களைக் கூறும் பெரிய புராணச் செய்யுட்களை அறியும் வாய்ப்பும் இந் நூல் வாயிலாக எமக்குக் கிடைக்கிறது.

இந்நூலின் முற்பகுதியிலே ஐந்து கட்டுரைகள் இடம் பெறு கின்றன. அண்ணாமலைப் பல்கலைக் கழகக் கல்வெட்டு ஆராய்ச்சி விரிவுரையாளர் திரு. வை. சுந்தரேச வாண்டையார் எழுதிய தலங்களின் வரலாற்றுக் குறிப்பு முதலில் வைக்கப்பட்டுள்ளது. முன் வெளிவந்த ஏனைய திருமுறைகளில் இடம் பெறாத தலங் களே இங்குக் கூறப்படுகின்றன. தலம் இருக்குமிடம், அதன் வேறு பெயர்கள், பெயர்க்காரணம், மூர்த்திகள், தீர்த்தங்கள், தல விருட்சம், தலச் சிறப்பு, தலத்தைப் பற்றிய நூல்கள், கல்

வெட்டு வரலாறு முதலிய பல குறிப்புக்கள் இதில் கூறப்படு கின்றன. தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வர் எழுதி யுள்ள அப்பர் தேவாரத்தில் இலக்கியப் பண்புகள் என்னும் கட்டுரையிலே அப்பர் கவிதைப் பண்பும், சிறப்பும், அவர் மேற் கொண்ட யாப்பு வகைகள், உவமை, நயம், கற்பனை, இயற்கை வருணனை, சொல்லாட்சி எட்டழகும் அவை பெற்று மிளிரும் திறன் முதலிய பல அரிய கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. உரை யாசிரியர் எழுதியுள்ள நாவுக்கரசர் அருளிய நன் ஞானம் என்னும் கட்டுரை சமய உண்மைகள் பலவற்றை விளக்கி நிற்கிறது. திரு. வி. சபேசன் எழுதியுள்ள "புராண வரலாற்றுக் குறிப்புகள்" என்னும் பெயர் கொண்ட கட்டுரை அப்பர் திரு முறையிற் கண்ட புராண வரலாற்றுக் குறிப்புக்களுக்கு விளக்கம் கூறுகிறது. திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்கள் திருநாவுக் கரசு சுவாமிகள் வரலாற்றை விரிவாக ஒரு கட்டுரையில் கூறியுள் ளார். இத்தகைய நூலுக்கு இன்றியமையாத அரும் பொரு ளகராதி, தலப்பதிக அட்டவணை, பாட்டு முதற்குறிப்பகராதி முதலியவற்றைக் கொண்டு சிறந்த முறையில் வெளியிடப்பட் டுள்ள ஆரும் திருமுறை என்னும் நூல் சமய உலகும் இலக்கிய உலகும் ஒருங்கே வரவேற்கவேண்டியதொன்றாகும். திருநாவுக் கரசு நாயனர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் ஆரும் திருமுறை தருமபுர ஆதீன வெளியீடு. விலை எட்டு ரூபாய். வேண்டுவோர் காஷியர், தருமபுர ஆதீனம், மாயூரம், தென் இந்தியா என்ற விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

# கந்தபுராணச் சுருக்கம்

### ஸ்ரீ சம்பந்த சரணலய சுவாமிகள் அருளிச் செய்தது

வேத சிவாகமங்கள் யாவற்றினதும் சாரங்களை உள்ளடக்கிப் பரந்து விளங்குவது வடமொழிக் காந்த புராணம். காந்த புராணத்தில் ஒரு பிழிவாய் அமைந்த சங்கர சங்கிதையினுள் முற்பட்டு விளங்குவது சிவரகசிய காண்டம். அச்சிவரகசிய காண்டத்திலமைந்த முதல் ஆறு காண்டங்களையும் "கந்த புராணம்" என்னும் பெயருடன் - தமிழ் மொழியில் அருளிச் செய்தவர் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் அவர்களாவர். ஏறக்குறைய பத்தாயிரத்து முந்நூற்று நாற்பத்தாறு விருத்தப் பாக்களால் இயன்றது அவர்கள் இயற்றிய கந்தபுராணம்.

இன்று யாம் உச்சிமேல் வைத்துப்போற்றுகின்ற கம்பரே கந்தபுராணம் பாட இருந்தார் என்றும், கச்சியப்பர் முன்னரே பாடியுள்ளார் என்பதை அறிந்து "கச்சியப்பர் என்னும் சுருவா கந்தபுராணம் என்னும் பெருங்கடலைக் கலக்கிற்று" எனக்கூறி இராமாயணத்தைப் பாடத் தொடங்கினர் என்றும் ஒரு மரபுரை உண்டு. இந்த மரபுரையின்படி, கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் கம்பர் காலத்துக்கு முந்தியவர் என்பது தெளிவாகின்றது கம்பருக்கு முன்னதாக விருத்தப்பாக்களால் ஒரு மாபெரும் காப்பியத்தைத் தமிழுலகத்துக்கு அளித்து வெற்றிகண்டவர் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் என்பதை எவராவது மறுக்க முடியுமென்று யான் கருதவில்லை. தலை தடுமாறிக்கிடந்த தமிழுலகத்தினை "புன்னெறியதனிற் செல்லும் போக்கினைவிலக்கி உண்மைக் கலாசாரங் காண வைத்தது - இந்த - நவையறு காட்சி நல்கும்" கந்தபுராணந்தான் என்று கூறுவது மிகையாகாது. "படிக்குந்தோறும் படிக்குந்தோறும் தெவிட்டாது தித்தித்தமுதூறும் அதியற்புத அதிமதுரச் சுத்தச் செந்தமிழ் ஆகிய கந்தபுராணம்" எனச் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களே கூறி வாயூறுகின்றுர்கள். இந்தக் கந்தபுராண கலாசாரந்தான் ஈழநாட்டின் பழந்தமிழ்க் கலாசாரம். கந்தபுராணம் பற்றிப் பேசாத - கந்தபுராண கலாசாரத்தை எடுத்தோதாத இலக்கிய வளர்ச்சி எதுவும் உண்மையான இலக்கிய வளர்ச்சியாகாது. பண்டைக்காலந் தொடங்கியே ஈழநாட்டில் கந்தபுராண மரபு - பரம்பரை - ஒன்று நன்கு செழித்து வளர்ந்து வந்திருக்கிறது, அதுதான் தமிழுக்கும் சைவத்துக்கும் உயர் நிலையாய் அமைந்தது. அதுதான் நாவலர் மரபுக்கும் வித்திட்டு உரமளித்துக்கொண்டிருந்தது, அது நிலைத்து வாழவேண்டும்.

முருகக் கடவுளின் பெருமைகளை எடுத்துரைக்கின்ற இந்நூலிலே, திருமுறைகளிற் குறிப்பிட்டிருக்கும் சிவபெருமானின் பெருமைகளும் விரிவாக விளக்கப்படுகின்றன, இங்ஙனமாகத் தனிப்பெருமையும் சிறப்பும் வாய்ந்த கந்தபுராணத்தில் பகுதிகள் சிலவற்றை - திருத்தருமையாதீனத் திருக்கூட்டத்து அடியார்களுள் ஒருவராகிய ஸ்ரீ சம்பந்த சரணலய சுவாமிகள் எடுத்து விளக்கியதைக் கேட்டுக்கொண்டிருந்த மைசூர் மன்னர் - அதில் மிகவும் ஈடுபட்டு "இந் நூல் மிக விரிவுடையதாய் இருத்தலின், எம்போலியர்க்குப் பயன்படுமாறு இதனைச் சுருக்கிச் செய்தருளல் வேண்டும்" என வேண்டிக்கொண்டதற்கிணங்க அவர்கள் உளமகிழ்ச்சியுடன் சுருக்கமாகப் பாடியருளியதே இக் கந்தபுராணச் சுருக்கம் ஆகும்

பத்தாயிரத்து முந்நூற்று நாற்பத்தாறு விருத்தப்பாக்களாலியன்ற கந்தபுராண நூலினை ஆயிரத்து நாற்பத்தொன்பது பாக்களாகச் சுருக்கிப் பாடியதே இந் நூலாகும். சிலேடை, யமகம், திரிபு, முரண்தொடை முதலிய சொல்நயங்கள் விரவ - ஒரு சிறு செய்தியும் தவறாத வகையில் - சுருக்கிப் பாடப்பெற்ற இந்நூலில், பல பாடல்கள் சந்த விருத்தங்களாய் மிக மிடுக்கான நடையிற் காணப்படுகின்றன. மைசூர் அரசருக்கும், தருமபுர ஆதீனத்திற்குமுள்ள தொடர்பு இன்றும் இருந்து வருகின்றது. இப்பொழுது தமிழ் நாட்டுக் கவர்னராய் இருக்கும் மைசூர் மகாராசா அண்மையில் தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான ஆலயத்திற்கு விஜயம் செய்தார். இந்த அரிய நூலினைத் தமிழ்ச் சைவ மக்கள் பாராயண நூலாகக்கொண்டு பாராயணம் செய்துவருவது யாம் தென்னிந்தியாவிற் காண்பதொன்று. அதற்கு ஆக்கமளிக்கும் வகையில் திருத்தருமையாதீனத்தில் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள் இந் நூலினை வெளியிடுவதற்குத் திருவுளங்கொண்டார்கள். அதன் பயனாக, இக் கந்தபுராணச் சுருக்கம், திருத்தருமையாதீனத்தின் ஆறாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருமூர்த்த நூதன ஆலய மகா கும்பாபிஷேக மலராக மலர்ந்திருக்கின்றது. இந் நூலினை, கும்பாபிஷேகத்தையொட்டி நிகழ்ந்த தோத்திர சாத்திர மாநாட்டில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்களே அருளாசிச் செறிவுரை நிகழ்த்தி வெளியிட்டருளினார்கள். ஆறுமுகநாவலர் பெருமான் அவர்கள் தாமெழுதிய இரண்டாம் சைவ வினாவிடையில், ஸ்ரீ விநாயகர் தோத்திரத்தில் இந்நூலில் வருகின்ற விநாயகக் கடவுள் வணக்கமாகிய இப்பாடலை.

"மாவேலை யாலமதையடக்கித் தன்னுண்
மண்டுலக மண்டமெலாம் வளர்ந்துதானோர்,
காவேயினி முன்னுதித்த வரசிற்றோன்றிக்
கடம்பு புனை குருந்தினுக்குத் துணையதாகித்
தூவேதந் தலைகாண்டற்கரியதாகித்
துன்பமுறு பிறவியெனுத் துகள்சேர் வெய்யி
லாவேனைத் தன்னடியார் நிழலிற் சேர்த்த
அத்திதனைப் பத்திசெய்து முத்திசேர்வாம்"

சேர்த்திருப்பது இங்கு குறிப்பிடத்தக்க தொன்றும்

கயிலை யாத்திரை புரிந்தருளிக் கனகாபிஷேகமும் கொண்டருளிய தருமையாதீனப் பெருங் குரவராக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் வீற்றிருக்கும் திசைநோக்கி அவர்களை வணங்கித் தமிழ்ச் சைவத் தொண்டுகள் மேலும் ஓங்குவனவாக என வாழ்த்துவோமாக.

தெய்வம் மணக்கும் பொன் மலரெனும்படி தூய வெள்ளைத் தாளில் முத்துக்கள் போன்ற எழுத்துக்களைக் கொண்டு கவின்பெற அச்சிடப்பட்டுள்ள இந்நூலினைத் தமிழ் கூறும் நல்லுலகம் பெற்றுப் பயனடைவதாக.

கந்தபுராணச் சுருக்கம் - ஸ்ரீ சம்பந்த சரணாலய சுவாமிகள் அருளிச்செய்தது.

தருமையாதீன வெளியீடு, விலை குறிப்பிடப்படவில்லை கிடைக்குமிடம் - தருமையாதீனம், தருமபுரம்.

---

# ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகளின் குருபக்தி

திரு. அ. சுவாமிநாதன்

'குரு இல்லா வித்தை பாழ்', 'குருமொழி கொள்ளாச் சீடன் பயனிலன்' என்பனவற்ருல் குருபக்தியின் உயர்ச்சியை அறியலாம். வடநாட்டில் இராமகிருஷ்ண பரமகம்சருக்கு சுவாமி விவேகானந்தர் உலகம் வியக்கும் சீடராய் இருந்து நற்ருெண்டுகள் புரிந்தார்; ஆனுல். அவரது காலத்திற்கு முன்னரேயே தமிழகத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள், ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகர்க்கு ஒப்பற்ற சீடராய் அமைந்து நாடெங்கிலும் சைவத்தைத் தழைக்கச்செய்து எல்லார் உள்ளங்களிலும் இடம் பெற்றுவிட்டார். இவரை ஒப்பாரும், மிக்காரும், இந்நாள்வரை, எவரும் யாண்டும் இருந்திலர் என்பது வெள்ளிடைமலை.

சுவாமிகள் அவர்கள், திருச்செந்தூர் முருகன் அருளைப் பூரணமாகப்பெற்றதுடனல்லாது, மதுரை மீனுட்சியம்மையாரால் முத்துமாலையும் அணிவிக்கப்பட்டுப் பிறவியின் பெரும் பயன் கண்டார்; கலைமகளின் அருளையும் பெற்று அரிய செயல்களனைத்தையும் செய்து காட்டினுர்; இத்துணைச் சிறப்பினராயிருந்துங்கூடத் தமது கல்வியறிவால் செருக்கடையவில்லை. தம்மை ஓர் அடிமையாகவும், உழலும் ஞமலியாகவும் எண்ணி வாழ்க்கைப் பௌத்தைக் கடத்திஞர். தமக்கென ஓர் வித்தியாகுரு வேண்டுமென்பதை உணர்ந்து அதற்காகக் கவன்ருர். அஞ்ஞான்று. தருமபுரத்தில் நான்காம் பட்டத்தில் வீற்றிருந்தருளிய (மேற்கூறிய) பரமாசாரிய சுவாமிகளாகிய ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர்கள், அவர் அவாவைப் பூர்த்திசெய்து ஒப்புயர்வற்ற குருமணியாகக் காட்சி கொடுத்தார். அதன் பயனுய் முகிழ்த்து எழுந்ததுதான் பண்டார மும்மணிக்கோவை என்னுந் தன்னேரில்லாத் தண்டமிழ்நூல்; இது. சைவ சித்தாந்தக் களஞ்சியமாக அமைந்துவிட்டது; குருவைப் பக்தியுடன் வழிபட்ட வகையையெல்லாம் அடுத்தது காட்டும் பளிங்கெனக் காட்டுகிறது.

மேலும் இந்நூல் மெய்ப்பொருளின் உறைவிடமாகத் திகழ்கின்றது. குருவின் பொன்னடிகளைத் தமது சென்னி வைத்து இறைஞ்சி வழிபட்டு நூலைத் திறமுறப் பாடியுள்ளார். உடலாகிற சிறு சேவகத்தில் பொறிகளாகிற ஐங்களிறுகளும் ஒன்ருய் நெருங்கிப்புக்கு இடர்பயப்பதற்குச் சற்றும் ஆற்ருராய்க் கவன்று 'முத்தி நாடெய்தவோர் ஞானவாரண நல்குதிர்' என வேண்டியுள்ளார். இந்திர பதவியோ, அன்றி மலரவன் தொழிலோ, மாயவன் ஆட்சியோ வேண்டிற்றிலர். குருநாதரின் தொண்டர் திருவமுது ஆர்ந்து தெருக்கடை எறிந்த பரிகலம் மாந்திப் பவக் கடலுழக்கும் வரனுடைச் சிறு ஞமலியாய் இருந்தாகிலும் அயராது அருளைப்பருகத் துடிப்புடன் உள்ளதைக், கண்ணீர் வாரத் தெரிவித்துள்ளார். தேசிகர், சம்பந்தம் என்ற பெயருந் தரித்தமையால், தம்மையும் அவருடன் சம்பந்தஞ் செயத் தகும், தகும் எனக் கூறுகின்ருர்.

குருவைக் காதற் றலைவராகவும், தம்மைக் காதலியாகவும் பாவித்து வழிபடுகிருர். உயர்ந்தோன் ஒருவன் ஒத்தோள் புணரினும், இழிந்தோள் புணரினும் பழிகொள்ளப்படாதவாறு போலத் தமது ஞானப்புணர்ச்சியும் தகுதிபெறும் என்பதைச் சுட்டிக் காட்டி,

" ......................யாமுனைக் காதலித் தனமாற்
காதலின் எமையருட் கைப்பிடித் தருளி
ஒருவரு முணராப் பரம வீட்டில்
இருளறை திறந்த பெருவெளி மண்டபத்
துயர்நா தாந்தத் திருமல ரமளியிற்
புளகமெய் போர்ப்ப மொழிதடு மாற
..........................................
பேரா வியற்கை பெற்றினி திருப்ப
ஆரா வின்பம் அளித்தருள் எமக்கே"

என்று மொழிந்துள்ளார். குருநாதர் வளர்த்த பாதபத்தின் இலை, தளிர், அரும்பு, மலர், பிஞ்சு, காய் முதலியவற்றையெல்லாம் பல்லோரும் பகிர்ந்து கொண்டனரென்றும், சித்தாந்தக் கனியை மட்டும் ஞானமிக்கோர் வன்மையால் பற்றினரென்றும், அதனல்கனியுண்ட அன்னேரின் அடியிணையேனும் மாந்தி எளியவராகியத் தாம் வாழ விழைவதை "வேம்பெனக் கொண்டனன் விண்ணவர் அமுதே" என்னுந் தொடரால் அறிவித்துள்ளார். இன்னும் மிகவும் நயம்பட, ஆண்டவனைக்காட்டிலும் உயர்வுபடக் குருவைப் போற்றி அகங்குழைய,

தருமையாதீனத்திற்குச் சொந்தமான
சீகாழி ஸ்ரீ சட்டைநாத சுவாமி தேவஸ்தானத்திற்கு
வருகைபுரிந்த



சென்னை மாநில ஆளுநர் கனம் ஸ்ரீ ஜெயசாமராஜ
உடையார் அவர்கள் திருக்கோயிலை வலம்வருதல்
21—9—64.

தருமையாதனத்திற்குச் சொந்தமான வேளூர் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி
தேவஸ்தானத்தில்



சென்னை மாநில ஆளுநர்
கனம். ஸ்ரீ ஜெயசாமராஜ உடையார் அவர்கள்
ஸ்ரீ ஆதி வைத்தியநாத சுவாமியைத் தரிசித்தல் 21-9-64.

சென்னை மாநில ஆளுநர் ஸ்ரீ ஜெயசாமராஜ உடையார் அவர்கள் வருகை

"தலைப்படு கலைமதி தாங்கா தாங்கத்
தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படு
மானிட னுய வடிவுகொண் டருளாது
மானிட னுய வடிவுகொண் டருளி
எற்பணி பூணு தெற்பணி பூண்டு
பாரிடஞ் சூழாது பாரிடஞ் சூழ்தர
ஆரூ ரமர்ந்த ஞானசம் பந்த"

என்று அழகு தமிழ்ச்சொற்களால் எண்பொருளவாகச் செலச் சொல்லி வாழ்த்தியுள்ளார்.

இன்னுந் தம்மை இரும்பாகவும், குருவை, காந்தக் கல்லாகவும் பாவித்துப் பாடியுள்ளார். தமக்கு மெய்ப்பொருளை வலியனே முன்வந்து உணர்த்தல் கடமையாகுமென்பதையும், உணரா உள்ளத்தில் யாங்ஙனமேனும் தெள்ளிய முறையில் அருளிச் செயுமாறும் இறைஞ்சுகிறுர். தீயில் பற்ருத கதலித் தண்டையும் பையப்பைய மற்ருெரு சூழ்ச்சியினுல் பற்றுவித்தாலெனக் கருணை சூழுமாறு கல்லும் உருகக் கரைந்து கோருகிறுர். குருமணியிடம் ஞானம் பெறும்வரைத் தாம் அஞ்ஞானியாக யிருந்தமையை உணர்ந்து ('அறிதோறும் அறியாமை கண்டற்ருல்' என்னுங் குறட் கருத்தமைய) 'தன்னேரில்லா ஞானசம்பந்தன் அருளாத போது வெளியாயிருந்த வெல்லாம் இருளாயிருந்த எனக்கு' என்பதால் விளக்குவதை அறியலாம். சேய் புரக்கும் தாயாகக் குருநாதரை வழிபட்டு முழு ஞானமும் ஊட்டப்பெற்ருர். தம்மால் வாயார வாழ்த்த முயன்றும் கலைமகள் எள்ளத்தனை அளவேதான் உதவி புரிந்தாள் என்றும், முற்றும் அருள் புரியாதது குறையே என்றும் கூறுகின்றபோது நம் உள்ளங்கட்கு வேதனை வெள்ளத் தனையாகின்றது! நாமகளே, அவர் நாவில்நின்று இசைத்த கோவை எனத் தெரிவித்துள்ளமையால் இதன் பெருமையும் அளவிடற் கூடுமோ? உத்தம குருநாதரைப் பெற்ருல்தான் எந்த வித்தகரும் புகழ் ஒளி வீசி இகபர இன்பந் துய்க்க முடியும்; இன்றேல் மாயையால் சிக்குண்டு மாண்பிலராய் உழல்வது திண்ணம்.

நம் சுவாமிகள், தம் அருட்குருவைப், பக்தியுடன்,

"நான்மறைக் கிழவ நற்றவ முதல்வ,
நூன்முறை பயின்ற நுண்மைசா லறிஞ,
சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்க் கவிஞ,
கற்றவர் வியக்குங் காவியப் புலவஎன்றும்
கவிப்பிர சங்க,சற் குருராய, தேசிகராய,
கண்மணி, சிந்தாமணி, சூளாமணி, பிறர்கொண்டு
ஆளாமணி, விண்மணி, ஒண்மணி, செம்மணி"

என்றும் கூறித் துதிக்கிருர். இவ்வளவும் சொல்லியும் அவர் குருநாதர் எங்கே அருட்கண் புரியாமல் வாளாயிருந்து விடு வாரோ என ஐயமும், ஏக்கமுமடைந்து அதனுல் பொருமி, புழுங்கி.

"அருளா தொழியினும் பரிபவம் நினக்கே"

எனவும் நிலைமறந்து கழறிவிட்டார்; என்னே குருபக்தி! ஆன்றவிந் தடங்கிய சீலச் செல்வர் இவரினும் இனியார் இனியுந் தோன்றுவரோ? தோன்றினும் அவர்க்கு சற்குருவாய் விளங்க யாரே முன்வரல் ஒல்லும்? அப்பேறு யார்க்கு வாய்க்கும்?

---

## அறிவிப்பு

**கந்தபுராணச் சுருக்கம்:**

சம்பந்த சரணுலய சுவாமிகளால் அருளிச்செய்யப்பெற்ற இந்நூல் கந்தபுராணத்தின் சாரமாக அமைந்துள்ள ஒப்பற்ற பாராயண நூல் ஆகும். இப்பொழுது இந்நூல் தருமையாதீன வெளியீடாக மலர்ந்துள்ளது. அழகிய கையடக்கப்பதிப்பு. சுமார் 300 பக்கங்கள் கொண்டது. பதிவுத் தபால் செலவு உட்பட ரூ. 2—00. அனுப்பி பெற்றுக்கொள்ளலாம்.

**ஆருந்திருமுறை: (தருமையாதீன வெளியீடு)**

திருநாவுக்கரசு நாயனுரால் அருளிச்செய்யப்பெற்ற அரிய நூல்: சொற்சுவை, பொருட்சுவை மிக்கது: சுமார் 1026 பக்கங்கள் கொண்ட இந்நூல் குறிப்புரையோடு வெளியிடப்பெற்றுள்ளது. அடக்கவிலை ரூ. 8-00. தபால்செலவு ரூ. 2-75, முன்பணம் அனுப்பியே பெறவேண்டும். வி. பி. யில் அனுப்ப இயலாது.

**திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ்:**

மகாவித்துவான் மீனுக்ஷிசுந்தரம்பிள்ளையவர்களால் அருளிச் செய்யப்பெற்ற சிறந்த நூலாகும். இந்நூல் ஆச்சாள்புரத்தில் எழுந்தருளியிருக்கும் திருவெண்ணீற்றுமை மீது பாடப்பெற்ற நூறு பாடல்களைக் கொண்டது. ஆச்சாள்புரத் தலவரலாறும், திருப்பதிகங்களும் இணைக்கப்பெற்றுள்ளன. தபால் செலவு உட்பட 0—80 காசு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். கிடைக்குமிடம்: ஆச்சாள்புரம் தேவஸ்தானம், கொள்ளிடம் வழி.

**திருக்குவளை ஸ்ரீ தியாகராஜசுவாமி உலா:**

திருக்குவளை தேவஸ்தான வெளியீடு, ஸ்ரீ தியாகராஜசுவாமி உலாவுடன், தலவரலாறும் பதிகங்களும், இணைக்கப்பெற்றுள்ளன. அரிய நூல். தபால் செலவு உட்பட 0—65 காசு அனுப்பி மேற்படி தேவஸ்தானத்திற் பெறலாம்.

# செய்திகள்

## ஜன்மநக்ஷத்திர விழா

தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களது ஜன்ம நக்ஷத்திரவிழா. திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் 2—11—64 அன்று மிக்க சிறப்பாக நிகழ்ந்தது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் எழுந்தருளி ஸ்ரீ அமிர்தகடேசப்பெருமான் ஸ்ரீ காலசம்ஹாரமூர்த்தி, ஸ்ரீ அபிராமி அம்மை முதலிய மூர்த்திகளைத் தரிசனம் செய்து தருமைக்கு எழுந்தருளினார்கள். 3—11—64 செவ்வாய்க்கிழமை காலை திருச்செந்தூர் சென்று கந்தசஷ்டி நாட்களில் செந்திற்பெருமானை உபவாசமிருந்து வழிபட எழுந்தருளினார்கள்.

## ஆதீனக் கல்விநிலையங்களின் கலைமகள் விழா

ஆதீனக் கல்வி நிலையங்களின் கலைமகள்விழா திருநெறிய தெய்வத் தமிழ்மன்றத்தில் சிறப்புற நிகழ்ந்தது. 6, 7, 8-10-64 வரையுள்ள நிகழ்ச்சிகள் சென்ற இதழில் வெளிவந்துள்ளன. 9—10—64 முதல் 15—10—64 வரையுள்ள நாட்களில் பலர் சிறந்த விரிவுரையாற்றினர். மன்னம்பந்தல் அ. வ. அ. கல்லூரிப் பேராசிரியர்களும் மற்றும் பலரும் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினர். தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியை வித்துவான், திருமதி. ப. நீலா அவர்கள், தருமையாதீனம் உயர்பள்ளித் தமிழாசிரியர், வித்துவான், திரு. பாலன், தலைமையாசிரியர், திரு. கணேசன் B. A., L. T., ஸ்ரீமத் சட்டைநாதத் தம்பிரான் சுவாமிகள் (கட்டளை விசாரணை, குமரக்கட்டளை, ஸ்ரீசுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம்) அவர்கள். வேத சிவாகம பாடசாலை ஆசிரியர்கள், சிரோமணி. பிர்ம்மஸ்ரீ கே. இராஜ கோபால சாஸ்திரிகள், சிவாகம வித்துவான். சிவஸ்ரீ சுவாமிநாத சிவாசாரியார் முதலியோர் சிறந்த முறையில் சொற்பொழிவுகள் ஆற்றினர். ஆதீனப் பல்கலைக் கல்லூரி மாணவர்கள் பலரும் கலந்து கொண்டு அம்பிகைபற்றிய பல தலைப்புக்களில் சொற்பொழிவாற்றினர். ஆதீனக் கல்விநிலைய மாணவ மாணவியர்களின் கலைநிகழ்ச்சிகள் சிறந்த முறையில் நடைபெற்றன.

## தருமையாதீன தேவஸ்தானங்களில்:

### நவராத்திரிவிழாச் சொற்பொழிவுகள்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான எல்லா தேவஸ்தானங்களிலும் நவராத்திரி விழாவை முன்னிட்டு நாள்தோறும் அம்பாளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்தப்பெற்றன. அம்பாளுக்குக் கொலு அலங்காரங்கள் நாள்தோறும் சிறப்பாகச் செய்யப் பெற்றிருந்தன. அன்பர்கள் பலர் திரளாக வந்து தரிசித்து அம்மையின் அருளுக்குப் பாத்திரமாயினர். வேளூர் ஸ்ரீவைத்திய நாதசுவாமி தேவஸ்தானம், சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானம், திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம், திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி தேவஸ்தானம், திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானம், திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானம், திருக்குவளை ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானம் ஆகிய திருக்கோயில்களில் நவராத்திரி விழா நாட்களில் அறிஞர்கள் பலர் சொற்பொழிவாற்றினர். சிவகாமியம்மை இரட்டைமணிமாலை. மீனாக்ஷியம்மைபிள்ளைத்தமிழ், அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ். அபிராமி அந்தாதி. மீனாக்ஷியம்மைகுறம். அம்மை அருள் என்ற தலைப்புக்களில் சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. நவராத்திரி விழா அம்பிகைக்குரிய விழாக்களில் ஒன்று ஆதலால் அம்பிகை அருள், பெருமை முதலியவற்றைக்கூறும் துதிப்பாடல்களே தலைப்புக்களாக அமைந்தன. மேலும் இன்னிசைச் சொற்பொழிவும் வீணை இன்னிசை முதலியனவும் நடைபெற்றன. சொற்பொழிவு முதலிய நிகழ்ச்சிகளில் அன்பர்கள் பலர் வந்து கலந்து கொண்டு கேட்டு மகிழ்ந்தனர்.

### சென்னை, தருமையாதீன மடாலய தேவாலய சமயப்பிரசார நிலையத்தில்

### ஆண்டு நிறைவு விழா

15—10—64 விஜயதசமி அன்று மாலை, நிலையத்தில் நடைபெற்றுவரும் திருமுறை வகுப்பின் பதினொராவது ஆண்டு நிறைவுவிழாவும் சம்ஸ்கிருத வகுப்பின் ஆருவது ஆண்டு நிறைவுவிழாவும் சென்னை அரசாங்கச் செய்தித்துறை அமைச்சர் களம், ஜி. பூவராகவன் அவர்கள் தலைமையில் கொண்டாடப் பெற்றன. அமைச்சர் இருவகுப்புக் குழந்தைகட்கும் பரிசுகள் வழங்கி, தமிழும், சம்ஸ்கிருதமும் நமது இரு கண்களைப்போல்

வன என்றும், பலமொழிகளையும் கற்கும் திறமை நமது தமிழ் மக்களுக்கு உண்டு என்றும், ஆனால் இளமையில்தான் மொழிகளைக் கற்க முடியும் என்றும், பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை இம்மாதிரி நிலையங்கட்கு அனுப்பிப் பயிலச்செய்வது சிறந்த முறை என்றும், ஆதீனம் செய்துவரும் இப்பணி போற்றத் தக்கதுஎன்றும் குறிப்பிட்டார்கள். திரு. ச. சிவகுமாரன் அவர்கள் "திருமுறைச்சிறப்பு" என்பதுபற்றி அரிய விரிவுரை நிகழ்த்தினார்கள். திரு. கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் "பார்வதி திருமணம்" இன்னிசைக் கதா காலட்சேபம் நிகழ்த்தினார்கள். ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும் நன்றியுரையும் கூறினார்கள். திரு. பி. சுவாமிநாதன் கடவுள் வணக்கமும் வாழ்த்தும் பாடினார்.

## வேளூர்க் கிருத்திகைப் பிரசாதம் வழங்குவதன் ஐந்தாவதாண்டு நிறைவு விழா

வைத்தீஸ்வரன்கோயிலில் கிருத்திகைதோறும் மிகச்சிறப்பாக நடைபெறும் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமி அபிஷேக சந்தனக் குழம்புப் பிரசாதமும், அர்ச்சனைப் பிரசாதமும் பெற விரும்பிய அறுபதுக்கும் மேற்பட்ட அன்பர்கள் ஆண்டொன்றுக்கு ரூ. 12—00 நிலையத்தில் காணிக்கைசெலுத்தி நியதியாகப் பிரசாதமும், ஆதீன மாதப் பத்திரிகையான "ஞானசம்பந்தம்" இதழும் பெற்று உடல் நலமும், உயிர் வளமும் பெற்று வருகின்றனர். இதன் ஐந்தாவதாண்டு நிறைவு விழா 24-10-64 சனிக்கிழமை மாலை நிலையத்தில் தர்ம ரக்ஷாமணி, திரு. K. பால சுப்பிரமணிய ஐயர் M. L. C., அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. இராவ்சாகிப், திரு. நல். முருகேச முதலியார் விழாவினைத் தொடங்கி வைத்தார்கள். "சித்தாந்தப் புலவர்மணி" திரு. N. R. முருகவேள் "தீராநோய் தீர்ப்பவன்" என்னும் பொருள்பற்றிச் சிறந்ததொரு சொற்பொழிவு ஆற்றினார்கள். தலைவர் தமது தலைமையுரையில் வைத்தீஸ்வரன்கோயில் பல்லாண்டுகட்கு முன்பிருந்தே சிறந்த பிரார்த்தனைத் தலமாக விளங்கி வருகிறது என்றும், தருமை யாதீனம் சிறந்த முறையில் இக்கோயிலைப் பராமரிப்பதோடு 150 மைல்களுக்கு இப்பால் உள்ள சென்னைமக்கட்கும் பிரசாதம் கிடைக்கும்படிசெய்திருப்பது போற்றத்தக்கது என்றும் குறிப்பிட்டார்கள். திரு. P. சுவாமிநாதன் வேளூர்த் தேவாரம், திருப்புகழ், பிள்ளைத்தமிழ் பாடிப் பிரார்த்தனை நிகழ்த்தினார். ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும், நன்றியும் கூறினார்கள்.

# எதிர்காலம்

திரு. கே. முத்துஜோதிடர்

(குரோதிஞூ கார்த்திகைமீ 1உ முதல் 29உ முடிய)
(16—11—64 முதல் 14—12—64 முடிய)

**1. மேஷம். அசுவதி - பரணி - கார்த்திகை ¼**

அசுவதி நக்ஷத்திரம் நான்குபாதங்களும் பரணி நக்ஷத்திரம் முதல் பாதமும், சுப சந்தோஷங்களையும் தனதான்ய விருத்தியையும், ஜீவன லாபத்தையும் தரும். பரணி 2, 3, 4 பாதங்களும் கார்த்திகை முதல் பாதமும் மிச்ரமான பலனைத்தந்து குடும்பத் தொல்லைகளையும் அதிக செலவினங்களையும்காட்டும், ஆனால், தெய்வபலம் பூர்ணமாய் முன்னின்று காக்கும். ஸ்திர சுக ஜீவனம் தரும். புதன் வியாழன் சுபமாகும்.

**2. ரிஷபம். கார்த்திகை ¾ - ரோஹிணி - மிருகசீரிஷம் ½**

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். வரவு செலவு சமனாகும், ஆரோக்யகுறைவும் உண்டுபண்ணும், தொழில் மாறுதல் உண்டுபண்ணும். ஸஸ்ய தான்ய விருத்திகளில் குறைவுகாட்டும். சனி, ஞாயிறு சுபமாகும்.

**3. மிதுனம். மிருகசீரிஷம் ½ - திருவாதிரை - புனர்பூசம் ¾**

மிதுனராசி 9 பாதங்களும் சுபத்தைத்தரும். இடம் மாறச் செய்யும். தூர சஞ்சாரமும், தொழில் மாறுதலும், மேலோர் பெரியோர்கள் ஆதரவும் கிடைக்கச் செய்யும். கிரஹவாஹன சுகபோகங்கள் விருத்தியாகும். திங்கள், புதன் சுபமாகும்.

**4. கடகம். புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.**

கடகராசி 9 பாதங்களும் ஸஸ்யவிருத்தி, தான்யவிருத்தியைத் தரும், சத்ருக்கள் சரண் அடைவார்கள். வியவகாரம் ஜெயிக்கும். ஆரோக்யம் உண்டுபண்ணும். கடன் நிவர்த்தியாகும். தெய்வ பலம் முன்னின்று காக்கும், வித்யா விருத்தியாகும். திங்கள், புதன் சுபமாகும்.

**5. சிம்மம். மகம் - பூரம் - உத்திரம் ¼**

சிம்மராசி 9 பாதங்களும் சுபமேயாகும். உத்தியோக உயர்வோடு இடம் மாறுதல் ஏற்படும். சுப சோபனாதிகள் மூலம் அதிக செலவினங்கள் ஏற்படும். வெகுதூர தேசத்திலிருந்து காணக் கூடாத நண்பர்களின் வரத்தும் லாபமும் உண்டாகும். ஆரோக்யமும் கிரஹ சுகமும் விருத்தியாகும். சனி, செவ்வாய் சுபமாகும்.

**6. கன்னி. உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**

கன்னியாராசி 9 பாதங்களும் விசேஷ லாபகரத்தோடும் வெகுகாலமாய் சாதிக்காத அசாத்யமான காரியங்கள் எல்லாம் சுலப சாத்யமாகவும் நடந்து உலக பிரசித்தியைத்தரும். ஆரோக்யம் உண்டுபண்ணும். ஸஸ்ய தான்யவிருத்தி ஏற்படும். ராஜாங்க மூலத்தாலும், மேலோர் பெரியோர்களாலும் சகல காரியங்களும் சாத்யமாகும். சுகபோக போக்யங்கள் விருத்தி யடையும். தெய்வபலம் ஓங்கி நிற்கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

**7. துலாம். சித்திரை $\frac{1}{2}$, - சுவாதி - விசாகம் $\frac{3}{4}$.**

துலாராசி 9 பாதங்களும் சுபமேயாகும். வெகு தூரத்தி லிருந்து ஆப்த நண்பர்களின் வரவு ஏற்பட்டு அதனல் விசேஷ தனதான்ய லாபங்களையும் சந்தோஷத்தையும் உண்டுபண்ணும். மாதம் பூராவும் தெய்வீகமான காரியங்களிலேயே ஈடுபடச்செய்து உலக க்ஷேமத்தின் பொருட்டும், அவரவர்களின் குடும்ப க்ஷேமத் தின் பொருட்டும், பெரிய யக்ஞயாகாதிகளின் பலனைக்கொடுத்து உலகில் கீர்த்தியை உண்டுபண்ணும். திங்கள், புதன் சுபமாகும்.

**8. விருச்சிகம். விசாகம் $\frac{1}{4}$ - அனுஷம் - கேட்டை.**

விருச்சிகம் 4-ம் பாதமும் அனுஷம் 4 பாதங்களும் சுபத்தைக் காட்டி துன்பத்தை உண்டுபண்ணும். மனம் நிம்மதி இராது. கேட்டை நான்கு பாதங்களும் உத்தியோக லாபத்தையும் ஸ்திர சுக ஜீவனத்தையும் தந்து, இல்லறசுகத்தை ஓங்கும்படி செய்யும். அடிக்கடி பந்துமித்ராளுடைய சேர்க்கையும் ஸத்காரியங்களில் அதிகமான செலவினங்களையும் தரும். வெள்ளி, சனி சுபமாகும்.

**9. தனுசு. மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$**

தனுர்ராசி 9 பாதங்களும் துக்கத்திலிருந்து விடுபட்டு கிரஹ சுகத்தைத்தரும், நஷ்ட தனம் தானுக வந்துசேரும். ஸஸ்ய தான்ய விருத்தி ஏற்படும். புத்திராதிகளால் மிகுந்த சந்தோஷத்தை உண்டுபண்ணும், மேலோர் பெரியோர்களின் ஆசி கிடைக்கும். தெய்வபலம் முன்னிற்கும். புதன், சனி சுபமாகும்.

**10. மகரம். உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம்**

மகரராசி 9 பாதங்களும் மகத்தான சுகபோகங்களைத் தந்து ஸ்தாவர ஜங்கம சொத்துக்களையும் தரும். உத்தியோகத்தில் எதிர்பாராத மேல் பதவிகள் தானுக வந்துசேரும். களத்திர சுகம் விருத்தியாகும். அடிக்கடி சஞ்சார பலனும் அதிகமாகும். ஆரோக்யம் உண்டுபண்ணும். புதன், வியாழன் சுபமாகும்.

## 11. கும்பம். அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி - ¾.

கும்பராசி 9 பாதங்களும் மிச்ர பலனைத்தரும். அதிக உழைப்போடு நன்மை காட்டும். ஈதி பாதைகளால் சிரமம் உண்டாகும், அடிக்கடி மனம் சஞ்சலம் அடையும். ஆனாலும், தெய்வபலம் முன்னின்று கவலைகளை நீக்கி சுபங்களை உண்டு பண்ணும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

## 12. மீனம். பூரட்டாதி ¼ உத்திரட்டாதி - ரேவதி.

மீனராசி 9 பாதங்களும் விசேஷ நன்மைகளைத்தந்து ஜீவன லாபம் நஷ்டதன லாபம் இல்லறசுகபோகபோக்யங்கள் மேலோர் பெரியோர்களின் விசேஷ அன்பு, கீர்த்தி பத்திரம் கிடைத்தல் ராஜாங்க மைத்ரம் எல்லாவற்றையும் தரும். சதா தெய்வசிந்தனை அதிகமாகும். புத்திராதிகளால் மனம் சந்தோஷம் அடையும். ஞாயிறு, திங்கள், செவ்வாய் சுபமாகும்.

மேலோர் பெரியோர் சாதுக்கள் மகாஜனங்கள் எல்லோருக்கும் மிகுந்த வணக்கத்துடன தெரிவித்துக் கொள்வதாவது :-

மேல் கண்ட ராசி பலன்கள் எல்லாம் அவரவர்களுக்கு சுபமாய் அமைந்து இருந்தாலும் மேற்படி மாதத்தில் உலகத்துக்கு நன்மைதரககூடிய கிரகபலன்கள் எல்லாம் வக்ராஸ்தமனங்களை அடைந்தும். நவநாயகங்களும் நாடீ நக்ஷத்திர ரீதியாக தோஷமடைந்தும் இருப்பதால் உலகம் பூராவாகவும் மகாஜனங்களின் தபோபலத்தாலும், ஸத்கர்மாசரணங்களாலும், (மகா யாகயக்ஞ பலன்களாலும) தான் உலகில் அமைதி ஏற்பட்டும் ஸஸ்யங்களுக்கும் தான்யங்களுக்கும் ஈதிபாதைகள் வராமலும் அதிவிருஷ்டி, அனுவிருஷ்டி, அகால விருஷ்டி முதலானவைகளால் ஏற்படக்கூடிய துன்பங்கள் எல்லாம் விலகியும், விலைவாசிகள் குறைந்தும். மகாஜனங்கள் சுபிக்ஷகரமாய் ஜீவனம் நடத்த ஹேது ஏற்படும். மஹாஜனங்கள் காமக்ரோதாதிகளை ரொம்பவும் குறைத்துக்கொண்டு இனி உலகில் தெய்வபலம் இல்லாவிட்டால் ஜீவிக்கமுடியாது என்கிற எண்ணத்துடன் ஸ்வதர்மத்தை கைவிடாமல் பரோபகார சிந்தனையுடனும் சதா தெய்வீக சிந்தனையுடனும் இருந்துகொண்டு ஒவ்வொரு கிராமம், நகரம், பெரிய பட்டணந்தோறும் தேவதைகளை திருப்தி செய்வதற்கான தெய்வீகமான வழிபாடுகளைப் பலவிதத்திலும் எல்லோரும் ஒற்றுமையாய் எல்லோருடைய தனத்தையும் சேர்த்துக்கொண்டு நாஸ்தீகமே இல்லாமல் மேல்கண்டபடி சகல ஸத்கர்மாக்களையும் செய்து கொண்டுவர தேவகோபம் தணிந்து உலகில் அமைதி ஏற்பட்டு ஸஸ்ய விருத்திக்கும் தான்ய விருத்திக்கும் எந்த விதமான இடைஞ்சல்களும் வராமல் காப்பாற்றி உலகமக்களை சந்தோஷம் அடையச்செய்யும்.

முக்கியமாக ஆங்காங்கும் துர்பிக்ஷ நிவாரக சாந்தியும் அன்னபூர்ணுஹோமமும் திக்பால யாகமும் நவக்கிரகங்களுக்கு அயுத லக்ஷ கோடி ஹோமங்களும் செய்துகொண்டு தேவதா பிரார்த்தனையும் செய்துவர வெகு சீக்கிரத்தில் சகல துக்கங்களும் நீங்கி சகல சுபங்களும் உண்டாகும். ராஜாங்கம் செழிக்கும்.

சென்னை, தருமையாதீன மடாலய தேவாலய
சமயப்பிரசார நிலையச் செய்தி

# நவராத்திரி விழா

6—10—64 முதல் 14—10—64 முடிய நிலையத்தில் நவராத்திரி விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. அருள் மொழி அரசு திருமுருக. கிருபானந்தவாரியார் விழாவைத் தொடங்கிவைத்துச் சக்தியின் சிறப்பையும், பெண்ணினத்தின் பெருமையையும் விளக்கினார்கள். சென்னைச் சட்டமன்ற சபா நாயகர் திரு. S. செல்லபாண்டியன், சென்னை நகர மேயர் திரு. S. கிருஷ்ணமூர்த்தி, சென்னை மாநிலக் கல்லூரி சம்ஸ்கிருதப் பேராசிரியர் திரு, P. திருஞானசம்பந்தம், வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், வித்துவான். திரு. G. M. முத்துசாமி பிள்ளை, அறநிலைய ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார், சென்னைச் சட்டமன்ற உதவிச் செயலர் திரு. சண்முகசுப்பிரமணியப் பிள்ளை, இசையரசு திரு. M. M தண்டபாணி தேசிகர், சென்னை மேல் சட்டமன்ற உறுப்பினர் திரு. K. கமலக்கண்ணன் ஆகியோர் முறையே ஒவ்வொருநாளும் தலைமை வகித்து அறவுரை கூறினார்கள். நிலையத்தில் தமிழ் வித்துவான் வகுப்பில் பயின்றுவரும் மாணவிகளான குமாரி. K. சுசீலா, குமாரி. K. சகுந்தலா, குமாரி. நீலாவதி, திருமதி. அலர்மேலு, குமாரி. காமகோட்டி. திருமதி. R. இலக்குமி ஆகியோரும், திருமதி. பிருந்தாவரதராசன், திருமதி. R. இராசரத்தினம் ஆகியோரும் முறையே. கொற்றவை வழிபாடு, அபிராமி அந்தாதி, பரணியில் கொற்றவை, திருமகள் வழிபாடு, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், கலைமகளும் கம்பரும், சாமுண்டீஸ்வரி, கலைமகளும் குமரகுருபரரும் என்னும் பொருள்பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். நாள்தோறும் நிலைய சம்ஸ்கிருத வகுப்பு ஆசிரியர், சிரோமணி திரு. T. N. கோபால சர்மா "தேவி பாகவதம்" பற்றி விரிவுரை நிகழ்த்தினார்கள். ஒவ்வொருநாளும் விகடம், பஜனை, இமயமலை யாத்திரைப் படக்காட்சி, ஸ்ரீ கபாலீசுவரர் பங்குனி உத்திரப் பெருவிழாப் படக்காட்சி, ஸ்ரீ சென்[illegible] மலீசுவரர் கோயில் பெருவிழாப் படக் காட்சி முதலிய [illegible] நிகழ்ச்சிகள் நடைபெற்றன. நாள்தோறும் நிலையத் தி[illegible] வகுப்பு ஆசிரியர் திரு. P. சுவாமிநாதன் "அபிராமி[illegible] பாராயணம் நிகழ்த்தினார். வித்துவான். ஸ்ரீ[illegible] தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வரவேற்புரை[illegible] கூறினார்கள்,

ஸ்ரீ குருபாதம்

YUR : :

# தருமையாதீனம் திருஞானசம்பந்தர் ஆலயம்

## திருநெல்வேலி சந்திப்பு.

ஞாயிறுதோறும் சொற்பொழிவு மாலை 6-30 மணி

15—11—64 கணம்புல்லர்
— திரு. வ. ச. நடராசபிள்ளை
கார்த்திகை விழா
— திரு. ம. சிவசம்பு

22—11—64 மூர்க்கநாயனார்
— திரு. வ. ச. நடராசபிள்ளை
சிவபோகசாரம் —அறிவோர் புகழ்ச்சி
— திரு. ம. சிவசம்பு

29—11—64 ஆனாயநாயனார்
— திரு. வ. ச. நடராசபிள்ளை
சிவபோகசாரம் - மடவோர் பழிப்பு
— திரு. ம. சிவசம்பு

6—12—64 சிறப்புலியார்
— திரு. வ. ச. நடராசபிள்ளை
சிவபோகசாரம் - பொதுநிலை
— திரு. ம. சிவசம்பு

13—12—64 திருவெம்பாவை
— திரு. வ. ச. நடராசபிள்ளை
திருப்பாவை
— திரு. ம. சிவசம்பு

வந்து, கேட்டு இன்புறுக !

...ல்லை அருணகிரி இசைக் கழகம்.

இராம. கனகசபாபதி,
அமைச்சர்.

K. Sundaresa Iyer, Agent, Dharmapuram A...
...dam press, Dharmapuram (Mayuram) 10-...